Regd. No. M. 4934 Phone: No. 2241

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)



மலர் 15 இதழ் 50 ] சென்னை 5-10-58 விளம்பி ஆண்டு புரட்டாசி 19உ ஞாயிற்றுக்கிழமை [ 4 பக்கங்கள் 7 காசுகள்

# ஒன்றரை லட்சம் ரயில்வே தொழிலாளர்களுக்கு அநீதி!

## அல்ஜீரியாவுக்கு டிகாலேயின் 'தங்கக் கூண்டு'!

### அடிமைப்படுத்திக்கொண்டே பல நன்மைகள் செய்வாராம்

#### விடுதலைப் போராட்டத்தின்மீது சீற்றம்

பாரிஸ், அக். 3—

அல்ஜீரியப் புரட்சிக்காரர்கள் நடத்திவரும் சுதந்திரப் போராட்டம் விவேகமற்றது என்று பிரெஞ்சு சர்வாதிகாரி டிகாலே இன்று கிழக்கு அல்ஜீரியாவில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் தெரிவித்தார்.

அவர்மேலும் பேசுகையில், இந்தப் போராட்டத்தை புரட்சிக்காரர்கள் நிறுத்திவிட வேண்டுமென்றும், அப்படிச் செய்தால் சிறைக் கதவுகள் திறக்கப்பட்டு ஆயிரக்கணக்கானபேர் விடுதலை செய்யப்படுவதோடு எங்கும் நம்பிக்கை வேரூன்ற வழிவகை செய்யப்படும் என்றும் கூறினார்.

இன்னும் சர்க்கார் உத்தியோகங்களில் அல்ஜீரியர்களுக்கு 10 சதவிகிதம் ஒதுக்கப்படுமென்றும், அல்ஜீரியாவை புனருத்தாரணம் செய்ய ஒரு ஐந்தாண்டு திட்டம் போடப்படுமென்றும், 2½ லட்சம் ஹெக்டேர் நிலம் முஸ்லீம் விவசாயிகளுக்கு விநியோகிக்கப் படுமென்றும், இரண்டு மாதங்களில் தேர்தல்கள் நடத்தப்படு மென்றும், அல்ஜீரியப் பிரதிநிதிகள் மூன்றில் இரண்டு பகுதிப்பேர் முஸ்லீம்களாக இருப்பார்கள் என்றும், எல்லா அல்ஜீரிய குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி தரப்படும் என்றும் கூறினார். (ராய்ட்டர்)

## நாகர்கள் மீண்டும் சூறு சூறுப்பு

### ஒரு சிப்பாய் கொலை மணிபுரி எல்லையில் கொள்ளை!

இம்பால், அக். 3—

நாகமலைத் தொடர்களில் அடர்ந்த மணிபுரி எல்லைகளில் நாகர்கள் மீண்டும் சூறையாடல் தொடங்கிவிட்டனர், என்று கடைசியாக இங்கு கிடைத்துள்ள தகவல்களிலிருந்து தெரிகிறது.

அக். 1-ந் தேதி இரவில் ஆயுத பாணிகளான நாகர் கோஷ்டி ஒன்று காட்டில் மறைந்திருந்து, உக்ருல் என்ற இடத்தில் ஒரு ரோந்துப் படையைத் தாக்கியது. 4-வது அஸாம் ரைபில்ஸ் படையைச் சேர்ந்த ஒரு சிப்பாய் கொல்லப்பட்டார்; மற்றொருவர் குண்டுக் காயம்பட்டு அபாயகரமான நிலைமையிலிருக்கிறார் என்று தெரிகிறது.

ஆயுதந் தரித்த 20 நாகர்களைக் கொண்ட மற்றொரு கோஷ்டி மணிபுரி பிரதேசத்திற்குள் புகுந்து மயாங்காங் என்ற இடத்தில் நேற்றிரவு சுமார் ஒரு மணி நேரம் கொள்ளையடித்தனராம். (பி. டி. ஐ)

## திறந்த மனதுடன் பிரச்சினைகளை ஆராய்ச்சி செய்யுங்கள்

### "இந்தியன் எக்ஸ்பிரஸ்" ஆசிரியருக்கு எம். கல்யாணசுந்தரம் எம். எல் ஏ. கடிதம்

சென்னை, அக். 4—

தோழர் எம். கல்யாணசுந்தரம் எம்.எல்.ஏ., 3-10-58 தேதிய (சென்னைப் பதிப்பு) "இந்தியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகையில் நம்பியார் உண்ணாவிரதம்பற்றி வெளியான தலையங்கத்திற்குக் கீழ்வரும் பதில் அனுப்பியுள்ளார்.

சென்னை, அக். 4—

அன்புள்ள ஐயா,

"பயமுறுத்தும் உண்ணாவிரதம்" என்ற தலைப்பின் கீழ் 3–10–58 தேதியிட்ட "இந்தியன் எக்ஸ்பிரஸ்" சென்னைப் பதிப்பில் வெளியாகியுள்ள தலையங்கத்தை நான் கவனமாகப் படித்தேன்.

லேபர் யூனியன் பக்கத்திலிருந்து உண்மை விபரங்கள் என்ன என்று தெரிந்துகொள்ளாமலேயே, நீங்கள் இவ்வளவு ஆணித்தரமாக உங்கள் அபிப்ராயத்தை எடுத்துக் கூறுவதற்கு அவசரப்பட்டிருப்பதைக் கண்டு நான் வருத்தப்படுகிறேன்.

இதன்மூலம் நீங்கள் ஒன்றரை லக்ஷம் ரயில்வேத் தொழிலாளிகளுக்கு அநீதி வழங்கியிருக்கிறீர்கள். தென் பிராந்திய ரயில்வே பொதுஜனத் தொடர்பு அதிகாரி வெளியிட்ட பத்திரிகைக் குறிப்பு உங்களிடையேதவறான கருத்தை ஏற்படுத்தியுள்ளது. தயவுசெய்து உங்களுடைய நிருபர்களை ரயில்வேத் தொழிலாளிகளைச் சந்திக்கும்படிச் சொல்லி, பொதுஜனத் தொடர்பு அதிகாரி கூறியுள்ளவைகள் இந்த ரயில்வேயில் எங்காவது அமுல் நடத்தப்படுகிறதா என்பதை நீங்களே தேர்ந்து தெளியுங்கள். உதாரணமாக, ரயில்வேத் தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் பேட்டிகள், பர்சனல் அதிகாரிகளால் ஒரு ரிஜிஸ்டரில் பதிவு செய்யப்படுவதாக, அந்தப் பத்திரிகைக் குறிப்பில் கூறப்படுகிறது. அத்தகைய முறை அமுலிலிருக்கிறதா என்பதை நிரூபிப்பதற்கு, எந்த ரயில்வே ஆபீசிலிருந்தாவது ஒரு ரிஜிஸ்டரையாவது ஆஜர்படுத்தும்படி நீங்கள் தயவுசெய்து அவர்களைக் கேளுங்கள். அதற்கு மாறாக, நீங்கள் கொஞ்சம் சிரமமெடுத்து தொழிலாளிகளிடம் விசாரணை செய்து பார்த்தால், பேட்டி கொடுக்க வேண்டும் என்று கேட்கப்படும் பொழுது, இந்த அதிகாரிகள் தொழிலாளிகளைப் பயமுறுத்துகிறார்கள் என்பதை நீங்கள் அறிய முடியும்.

#### பாக்கிப் பணம்

சுமார் பத்து வருஷ காலமாகக் கூட பாக்கிப் பணங்கள் கொடுக்கப்படாத உதாரணங்கள் பல இருக்கின்றன.

9 மாதம், 10 மாதமாக தினப்படி கொடுக்கப்படவில்லை. டிக்கெட் பரிசோதகர்கள், கார்டுகள், ட்ரைவர்கள், பயர்மென்கள் இதர டெக்னீஷியன்கள் ஆகிய, மாதம் 24 நாட்களுக்கு அதிகமாகவே லைனிலேயே இருக்க வேண்டியவர்களுக்கு அவர்களுடைய தினசரி அலவன்ஸ் கொடுக்கப்படாவிட்டால், அவர்கள் என்ன செய்வார்கள்? இங்கிரிமெண்டுகள் குறித்த தேதிகளில் 'சாங்ஷன்' செய்யப்படுவது கிடையாது. அவர்களின் அலவன்சுகள் கொடுக்கப்படாததாலேயோ அல்லது தாமதமாகக்கொடுக்கப்படுவதாலேயோ, தொழிலாளர்கள் எவ்வளவு துன்ப துயரமடைகின்றனர் என்பதை நீங்கள் எவ்வளவு தூரம் உணர முடியும் என்பது எனக்குத் தெரியாது.

#### படுமோசமாகிறது

கடந்த 5 வருடங்களாகவும், அதற்கு அதிகமாகவும்,இத்தகைய மோசமான நிலைமை நடைபெற்றுக்கொண்டு வருகிறது. நிலைமை அபிவிருத்தி அடையும் என்பதற்கு எத்தகைய அடையாளமும் கிடையாது. நிலைமை மோசத்திலிருந்து படுமோசமாகிக் கொண்டிருக்கிறது. இதனால் சகல பகுதி ரயில்வேத் தொழிலாளர்களிடையிலும் அதிருப்தியும், ஆத்திரமும் ஏற்பட்டுள்ளது. ரயில்வே நிர்வாகத்தின் தயவில் உள்ள தொழிற்சங்கங்களும்கூட இத்தகைய தாமதங்களையும் முறைகேடுகளையும் எதிர்த்து பகிரங்கமாகக் குற்றம் சாட்ட வேண்டி ஏற்பட்டுள்ளது.

#### அற்பக் கஷ்டங்களா ?

தொழிலாளிகளின் புகார்கள் ஆதாரமற்றவையல்ல என்பதை அரைமனதுடனாவது நீங்கள் ஒப்புக்கொண்டிருப்பதற்கு நான் நன்றி செலுத்துகிறேன். ஆனால் இவைகளெல்லாம் ஏதோ அற்பக் கஷ்டங்களென்றும், தொழிலாளிகள் சகித்துக்கொள்ளவேண்டுமென்றும் நீங்கள் நினைப்பதாகத் தோன்றுகிறது. ஒருக்கால், கூலி பெறும் தொழிலாளிகளின் கஷ்டநஷ்டங்களைப்பற்றி உங்களுடைய கண்ணோட்டம் அதுவாக இருக்கலாம்,

#### உண்மைக்கு மதிப்பு தருக

உண்ணாவிரதம் என்ற தத்துவத்தைப் பற்றி உங்களுக்குச் சொந்தக் கருத்துக்கள் இருக்கலாம். அதுபற்றி உங்களுடன் எத்தகைய தர்க்கத்திலும் இறங்குவதற்கு நான் விரும்பவில்லை. ஆனால் உங்களுடையதைப் போன்ற மிகவும் மதிப்புக்குரிய ஒரு தினப்பத்திரிகை, அழுத்தந்திருத்தமான முடிவுகளுக்கு வருவதற்கு முன்னால், உண்மைத் தகவல்களுக்கு மதிப்புக்கொடுத்து அவற்றைக் கணக்கிலெடுத்துக் கொள்வீர்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

#### ரயில்வே தொழிலாளிக்கும் கவலை உண்டு

நாட்டிலுள்ள உணவு நிலைமையைப்பற்றி நீங்கள் சரியாகவே கவலை தெரிவித்துள்ளீர்கள். நம் மக்களின் கஷ்டங்களைப்பற்றி ரயில்வேத் தொழிலாளிகளும் அதே அளவு-அதைவிட அதிகமில்லாவிட்டாலும்—கவலையுடனிருக்கின்றனர். ஆகவே, உண்ணாவிரதமிருப்பது என்ற முடிவெடுப்பதற்கு மேற்குறிப்பிட்டவைகளெல்லாம் காரணமாக இருந்திருக்கின்றன.

இக்குறைகளின் மீது, பொதுஜனங்களின் கவனத்தைத் திருப்புவதற்கு உண்ணாவிரதம் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதனால், பொதுமக்களின் ஆதரவுடன், வேலைநிறுத்தங்களில் ஈடுபடாமலேயே (அவ் வேலை நிறுத்தங்கள் நம் மக்களின் கஷ்டங்களை அதிகப்படுத்தும்) குறைகளுக்குப் பரிகாரம் தேட முடியும். கொடிய ஆத்திரமூட்டும் நிலைமை இருந்தபோதிலும், ரயில்வேத் தொழிலாளிகளும், லேபர் யூனியனும் இத்தகைய ஆக்கபூர்வமான கொள்கையைக் கடைப் பிடித்திருப்பதை நீங்கள் பாராட்டாதது வருந்த வேண்டிய விஷயமே.

திறந்த மனதுடன் நீங்கள் பிரச்சினைகளை ஆராய்ச்சி செய்திருந்தால், ரயில்வேத் தொழிலாளிகளின் கோரிக்கைகளுக்கு உங்கள் ஆதரவைத்தெரிவித்திருப்பீர்கள் என்பதிலும், புகார்களைப் பற்றி சரியான விசாரணைவேண்டுமென்று கோரியிருப்பீர்கள் என்பதிலும் எனக்குச் சந்தேகம் கிடையாது. இப்பொழுதும் கூட காலதாமதம் ஆகவில்லை. நீங்கள் ரயில்வே அதிகாரிகளிடம் உங்கள் செல்வாக்கை உபயோகப்படுத்தி, அவர்கள் நியாயமான போக்கைக் கடைப்பிடிக்கவும், திறமையான ரயில்வே போக்குவரத்து ஏற்படவேண்டுமென்பதற்காக, ஒரு நியாயமான பரிகாரம் தேடுவதற்கு அவர்கள் தொழிலாளிகளின் ஒத்துழைப்பைத் தேடும்படி நீங்கள் ரயில்வே அதிகாரிகளுக்கு ஆலோசனை கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

3–ம் நாள் உண்ணாவிரதத்தன்று அனந்த நம்பியார் மிகக் களைப்புடன் இருக்கிறார். காய்ச்சலும் கண்டு இருக்கிறது.

தென் பிராந்திய ரயில்வேத் தொழிலாளரின் 11 கோரிக்கைகளுக்காக - சென்னையில்

## தோழர் கே. அனந்தநம்பியார் உண்ணாவிரதம்

### இன்று நான்காவது நாள்

## பார்மோசாவுக்கு ராக்கெட் ஆயுதங்கள்

### அமெரிக்காவிலிருந்து வருகின்றன

தைபே, அக். 3—

பார்மோசாவின் தற்காப்புக்காக அமெரிக்காவிலிருந்து 'ஹெர்குலிஸ்' ரக ராக்கெட் ஆயுதங்கள் வந்துகொண்டிருக்கின்றன என்று இன்று அமெரிக்க ராணுவ வட்டாரங்கள் அறிவித்தன.

இதற்கிடையே குமாய்க்குசப்ளை ஏற்றிச் சென்று கொண்டிருந்த போக்குவரத்து சாதனங்களை முதல் தடவையாக மக்கள் சீன 'மிக்' விமானங்கள் தாக்கின. இத்தாக்குதலால் பார்மோசா தரப்புக்கு பலத்த சேதம் ஏற்பட்டது. இது தவிர சீன கரையோர பீரங்கிகள் இடைவிடாது முழங்கி குமாய் மீது உக்கிரமாக குண்டு மழை பொழிந்தன என்று குமாயிலிருந்து திரும்பி வந்துள்ள பத்திரிகை நிருபர்கள் தெரிவித்தனர். (ராய்ட்டர்)

## 81 நாடுகள் தந்த பணத்தை 18 நாடுகளா நிர்வகிப்பது?

### ஐ. நா.வில் இந்தியா கேள்வி ரஷ்யாவின் ஆதரவு

ஐ. நா சபை, அக். 3—

ஐக்கிய நாடுகள் சபையில் இந்தியாவின் நிரந்தரப் பிரதிநிதியான திரு. ஆர்தல்லால், ஐ. நா. பொதுச்சபையின் பொருளாதார நிதிக்குழுவில் பேசுகையில், "திட்டங்களுக்காக ஒதுக்கப்படும் பண நிர்வாகத்தில் சிறிய நாடுகளின் குரல் கேட்காதபடி செய்தால் இருவர்க்கங்கள் ஏற்பட்டிருப்பதாகவும் அதில் ஒன்று காசுகொடுப்பவரென்றும் இன்னொன்று பிச்சைக்காரர் என்றும் நினைக்க நேரிடுமென்றும், கூறினார்.

நிதி திரட்டுவது பற்றி ஆலோசனைகள் நடைபெற்ற போது, "உள்ளவன் இல்லாதவன் என்ற பிரச்னைதான் இங்கு ஆணிவேராக இருக்கிறது" என்றும் கூறினார்.

இது சம்பந்தமாக 2 நகல் தீர்மானங்கள் வந்தன. ஒரு நகலுக்கு 17 நாடுகளும், பாகிஸ்தானின் மற்றொரு நகலுக்கு 21 நாடுகளும் ஆதரித்து பிளவுபடவே, உடன்பாடு ஏற்படாமல் சபை ஒத்தி வைக்கப்பட்டது.

இந்த விஷயம் ஐ. நா. பொதுச் சபைக்கு வந்தது. அதில் இந்தியா ஒரு நகல் தீர்மானத்தைப் பிரரேபித்து, திரு. லால் பேசியதாவது: "இந்த நிதி திரட்டுவதே சிறிய நாடுகளையும் பின் தங்கிய நாடுகளையும் அபிவிருத்தி செய்வதற்காகவே ஏற்படுத்தப்படுகிறது. இது 81 நாடுகளின் கூட்டுமுயற்சியால் திரட்டப்பட்ட பணமாகும். ஆனால் இதன் நிர்வாகிகள் 18 தேசங்களைச் சேர்ந்தவர்கள் மட்டும்தான். இது என்ன ஜனநாயகம் ?" என்று கேட்டார்.

#### சோவியத் ஆதரவு

இந்திய தீர்மானத்தை சோவியத் யூனியன் பிரதிநிதி ஆதரித்து, 'நிதி வினியோகத்தில் சிறிய நாடுகளுக்கு அதிகாரம் இருக்கவேண்டும்' என்று வலியுறுத்தினார்.

#### பாகிஸ்தான் மிரட்டல்

10 வருடங்களாக காஷ்மீர் சம்பந்தமாக சரியான முடிவு ஏற்படவில்லையென்றும், இனியும் இப்படியே நீடித்தால் ஐ நா. சபைக்கு திராணி இல்லையென்று நினைக்க நேரிடுமென்றும், ஆசியாவிலும் உலகிலுமே அமைதிக்குப் பங்கமேற்படும் என்றும் பாகிஸ்தான் பிரதிநிதி பிரின்ஸ் அலிகான் பேசினார்.

#### ரஷ்யாவினால்தான்

"ஒரு டஜன் உத்திரவுகளை பாதுகாப்பு சபை இந்தியாவுக்கு அனுப்பியும்கூட அத்தனையையும் இந்தியா நிராகரித்துவிட்டது. அத்தனையையும் பாகிஸ்தான் ஆதரித்தது. இவ்வளவுக்கும் காரணம் ரஷ்யா ரத்து அதிகாரத்தைப் பிரயோகித்ததினால்தான்.

ஸ்தம்பித நிலைமையால் பாகிஸ்னில் சோர்வு ஏற்பட்டுள்ளது. காஷ்மீரிலிருந்துவந்த அகதிகள் காஷ்மீர் மீது படையெடுக்கத் துடிக்கிறார்கள். நாங்கள் தான் அமுக்கி வைத்திருக்கிறோம்.ஷேக் அப்துல்லாவையும் சிறைப்படுத்தியுள்ளார்கள். வாக்கெடுப்புநடத்த மறுக்கிறார்கள். இதனால் உலக அமைதிக்கு ஆபத்து" என்று பேசினார்.

பார்மோசா நிலைமையைப்பற்றி குறிப்பிடுகையில், "பீரங்கிப் பிரயோகம் நின்றால், வார்சா பேச்சுகள் அபிவிருத்தியடையுமென்றும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை வேண்டுமென்றும் பேசினார்.

#### பார்மோசா பற்றி ஆசிய—ஆப்பிரிக்க நாடுகள் தீர்மானம்

இந்தோனேஷ்யாவின் வேண்டுகோளின் பேரில் ஆசிய—ஆப்பிரிக்க நாடுகள் கூடி, தூரக்கிழக்கு நிலைமை பற்றி விவாதித்தன. பார்மோசா நெருக்கடி ஆசிய—ஆப்பிரிக்க நாடுகளைப் பெரிதும் பாதிக்குமாதலால் இது விஷயத்தில் இன்று சிரத்தையெடுத்துள்ளன. இருதரப்பினரும் ஏற்கக்கூடிய பொதுவான நாடுகளை ஒரு கமிட்டியாக அமைத்து,தூரக்கிழக்குப்போரை நிறுத்தவும், வார்சாவில் அமெரிக்க ஸ்தானீகர்களும், சீன ஸ்தானீகர்களும் நடத்திவரும் பேச்சுவார்த்தைகளை வெற்றிகரமாக்க உதவவும் நடவடிக்கையெடுக்கத் தீர்மானித்துள்ளன.

அந்தசப்கமிட்டியில்,இலங்கை, கனா, இந்தியா, இந்தோனேஷ்யா ஈராக், ஜப்பான், மலேயா, பிலிப்பைன் ஆகிய நாடுகள் உள்ளன.

#### மத்திய கிழக்கையும் விவாதிக்க வேண்டும்

அரபு நாடுகளெல்லாம், நேற்று ரஷ்யப் பிரதிநிதி கூறியதை ஆதரித்து, ஜோர்டான், லெபனானை விட்டு ஆங்கிலோ அமெரிக்கப் படைகளை வாபஸ் செய்விப்பது பற்றி விவாதிக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்கள்.

## நம்பியாரை எம்.பி.கள் கண்டனர்

### தபால், பேங்க், ஓட்டல், ரயில்வே, சர்க்கார் அச்சகம், எழுத்தாளர், கலைஞர், பெண்கள் பேராதரவு

சென்னை, அக். 3—

இன்று நம்பியாரின் 2-வது நாள் உண்ணாவிரதம். இன்று பிற்பகலில் பார்லிமெண்டு அங்கத்தினர்களான வாரியர் எம். பி., கொடியன் எம். பி., கே. டி. கே. தங்கமணி எம் பி., என். சி. சேகர் எம். பி., கே. எல். நரசிம்மன் எம். பி. ஆகியோர் நம்பியாரைக் கண்டு சென்றனர்.

திருவாளர்கள் : சாமி சிதம்பரனார், பேங்கு ஊழியர் சங்கத் தலைவர் ஆர். வி. கிருஷ்ணமூர்த்தி, தபால்-தந்தி தொழிற் சங்கப் பிரமுகர் ஜி. லக்ஷ்மணன் ஆகியோரும் நம்பியாரைக் கண்டு ஆதரவு தெரிவித்துச் சென்றனர்.

#### ஊர்வலங்கள்

பெரம்பூர் ரயில்வே ஓர்க்ஷாப் முதல் ஷிப்டு தொழிலாளர் ஒரு ஊர்வலமாகவும், 2-வது ஷிப்டு தொழிலாளர்கள் மற்றொரு ஊர்வலமாகவும், ஆக 2,000 பேருக்கு மேல் அதிகமாக வந்தனர். மற்றும் தாம்பரம் எழும்பூர் ரயில்வேத் தொழிலாளர் ஊர்வலமும், ஓட்டல் தொழிலாளர் ஊர்வலமும் இடிமுழக்க ஆதரவு கோஷங்களை ஒலித்துக்கொண்டு நம்பியாருக்கு மாலைகள் போட்டு வணக்கம் செலுத்திச் சென்றனர்.

கவர்ன்மெண்ட் பிரஸ் தொழிலாளர் சங்க சார்பில், அதன் பிரதிநிதியொருவர் நம்பியாருக்கு மாலை போட்டார்.

வடசென்னை தொழிலாளர் சம்மேளனச் செயலாளர் தோழர் ஆர். கோவிந்தசாமி தலைமையில் ஒரு மாபெரும் ஊர்வலம் வடசென்னையிலிருந்து புறப்பட்டு வழி நெடுக உண்ணாவிரதப் போராட்டத்தை ஆதரித்தும், 11 அம்சக் கோரிக்கைகளை உடனே கொடுக்கும்படி கோஷமிட்டுக்கொண்டும் 6 மணியளவுக்கு தோழர் நம்பியார் உண்ணாவிரதமிருக்கும் இடத்திற்கு வந்து தங்கள் ஆதரவைத் தெரிவித்துக் கொண்டனர். மேற்படி ஊர்வலத்தில் பங்குகொண்ட சங்கங்களாவன: மைசூர் பிரிமியர் மெட்டல் பாக்டரி யூனியன், இந்துஸ்தான் ரோலிங் மில் சங்கம், ஈ. த. சி. எம்ப்ளாயீஸ் யூனியன், தார் கம்பெனி தொழிலாளர் சங்கம், டின் பாக்டரி தொழிலாளர் சங்கம், மெட்டல் பாக்டரி தொழிலாளர் சங்கம், சவரன் பாக்குத் தொழிலாளர் சங்கம், மூக்குத் தூள் தொழிலாளர் சங்கம், டி. எச். கெங்கப்பா கம்பெனி தொழிலாளர் சங்கம், ஆகிய சங்கங்களைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் தங்கள் சங்க பதாகைகளைத் தாங்கிக்கொண்டு ஊர்வலத்தில் வந்தனர்.

கம்யூனிஸ்ட் கட்சி மயிலை ஏரியா 44-வது வட்ட உதவிச் செயலாளர் தோழர் தாமோதரன் அவர்கள் தோழர் நம்பியாருக்கு மாலையணிவித்து தமது வணக்கத்தை தெரிவித்துக்கொண்டார்.

#### தபால் தொழிலாளி

ஆமதாபாத்திலிருந்து சென்னைக்கு விடுமுறையில் வந்த ஒரு தபால் ஊழியர், போராட்ட நிதிக்காக 15 ரூபாய் எம். கல்யாணசுந்தரத்திடம் கொடுத்துச் சென்றார்.

#### கலைஞர்கள்

நேற்று மாலை ரயில்வேயில் பிரயாணம் செய்யும் கலைஞர்கள், 'ரயில்வேத் தொழிலாளர் போராட்டத்தை ஆதரிப்பதாக' கூறி வாழ்த்துக் கடிதத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றார்கள்.

#### ரயில்வே குமாஸ்தாக்கள்

ரயில்வே ஜெனரல் மானேஜர் ஆபீஸில் பணிபுரியும் கிளர்க்குகள் ரயில்வே அமைச்சருக்கு தந்தியடித்திருக்கிறார்கள்.

## சைப்ரஸில் பிரிட்டனில் கொடுங்கோலாட்சி!

### ஐ. நா. சபையில் கிரீஸ் பிரதிநிதி கடும் கண்டனம்

நியூயார்க், அக். 3—

சைப்ரஸ் தீவு துண்டு துண்டாக வெட்டப்படும் பேரபாயம் சைப்ரஸ் மக்களை எதிர்நோக்கி நிற்கிறது, என்று கிரீஸ் தேச பிரதிநிதி கோஷ்டித் தலைவர் கிரிஸ்டியன் பலாமாஸ் இன்று ஐ. நா. பொதுச் சபையில் தெரிவித்தார்.

சைப்ரஸ் மக்களை அடக்கி, ஒடுக்கி நிரந்தரமாக அடிமை கொள்ள முயற்சிக்கும் பிரிட்டனின் போக்கை வன்மையாகக் கண்டித்தார்.

சைப்ரசுக்கு சுதந்திரம் பெற்றுக் கொடுக்க வேண்டியது ஐ. நா. வின் பொறுப்பு என்றும் கூறினார்.

காலனி ஆட்சி முறை அதன் இறுதிக் கட்டத்தை—அழிவுக் கட்டத்தை அடைந்துவிட்டது, என்றும் அவர் கூறினார்.

## கொழும்பு திட்ட நாடுகள் கூட்டம்

### டல்லஸ் கலந்துகொள்வார்

நியூயார்க், செப். 3—

கொழும்புத் திட்ட நாடுகள் கூட்டம நவம்பர் 10 முதல் 14-ம் தேதிவரை வாஷிங்டனில் நடைபெறும். இக்கூட்டத்தில் அமெரிக்கப் பிரதிநிதிகளின் தலைவராக அமெரிக்க வெளிநாட்டு மந்திரி டல்லஸ் கலந்துகொள்வார். ஆஸ்திரேலியா, பிரிட்டன், பர்மா, கனடா, கம்போடியா, இலங்கை, இந்தியா, இந்தோனேஷ்யா, ஜப்பான், லாவோஸ், மலேயா, நேபாளம், நியூஜீலந்து, பாகிஸ்தான், பிலிப்பைன், தாய்லந்து, வியட்னாம் முதலிய கொழும்புத் திட்ட நாடுகள் இக்கூட்டத்தில் கலந்துகொள்ளும்.

## மூன்றும் நாள் உடல் நிலை

சென்னை, அக். 4—

இன்று 3-வது நாளாக உண்ணாவிரதமிருக்கும் ரயில்வே தொழிலாளர் தலைவர் அனந்த நம்பியாருக்கு, காய்ச்சல் ஏற்பட்டிருக்கிறது. வயிற்றுவலியும் ஏற்பட்டிருக்கிறதாக திரு. நம்பியார் தெரிவித்தார்.

மிகவும் களைப்புடன் காணப்படுகிறார்.

திருவொற்றியூர் டாக்டர் எஸ். கிருஷ்ணமூர்த்தியும், கே. ராமமூர்த்தியும் நம்பியாரின் தேக நிலையைப் பரீட்சித்தனர்.

## மூணாறுவேலைநிறுத்தம் 5-வது நாள்

மூணாறு, அக். 3—

கண்ணன தேவன் கம்பெனிக்குச் சொந்தமான ஓர்க்ஷாப்பில் இன்று 5-வது நாளாக வேலை நிறுத்தம் நீடிக்கிறது. 1-10-58-ல் மறியல் செய்த 116 பேர்களை போலீஸார் கைது செய்தனர். பின்பு அவர்கள் ஜாமீனில் விடுவிக்கப்பட்டார்கள் அனுதினமும் தொழிலாளர் ஊர்வலம் நடைபெறுகிறது. தேவிகுளம் வட்டாரம் இதனால் பெரும் பரபரப்படைந்துள்ளது.

## படகு கிளர்ச்சி வாபஸ்

கோட்டயம், அக். 3—

ஆலப்புழையில் கடந்த 3½ மாதகாலமாக ஐ. என். டி. யு. சி சங்கம் நடத்தி வந்த படகு தொழிலாளர் கிளர்ச்சி வாபஸ் பெறப்பட்டது. ஜில்லா தொழிலாளர் அதிகாரி தலைமையில் நடைபெற்ற முக்கூட்டு மாநாட்டில் ஏற்பட்ட உடன்பாட்டை ஒட்டியே கிளர்ச்சி வாபஸ் பெறப்பட்டுள்ளது. (பி. டி. ஐ)

## சீனாவை அங்[illegible]ரிக்க மாட்டார்களாம்

### ஜப்பானிய பிரதமர் கூற்று

டோக்யோ, அக். 3—

மக்கள் சீனாவை தற்போது அங்கீகரிக்கும் உத்தேசம் ஜப்பானுக்கு இல்லை என்று ஜப்பானிய பிரதமர் கிஷி தெரிவித்தார். வெளி விவகாரங்களைப் பொறுத்தவரையில் ஆசிய நாடுகளிடையே நெருங்கிய ஒத்துழைப்பை ஏற்படுத்துவதும் உள்நாட்டில் உண்மையான 'ஜனநாயகத்தை' நிறுவுவதுமே தங்கள் நோக்கம் என்று அவர் தெரிவித்தார். ஜப்பானில் உள்ள இடதுசாரி இயக்கம் ஜனநாயகத்தை ஸ்தாபிக்க இடையூறாக இருப்பதாகக் குற்றம் சாட்டினார். (ராய்ட்டர்)

## மத்திய நிர்வாகக் கமிட்டிக் கூட்டம்

### ஏ. கே. கோபாலன் வந்து சேர்ந்தார்

சென்னை, அக். 4—

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் இன்று காலை மீண்டும் கூடியது. தோழர் ஏ.கே கோபாலன் இன்று வந்து கூட்டத்தில் கலந்துகொண்டார்.

கட்சியின் செயற்குழுவின் வேலைபற்றிய அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டு அதன்மீது விவாதம் நடக்கிறது.

ஜனசக்தி

சென்னை 5-10-1958

# பிரான்ஸ் மீண்டும் புத்துயிர் பெறும்

பிரான்சில் டிகால் நடத்திய வாக்கெடுப்பில், கிட்டத் தட்ட 80 சதவிகிதம் வாக்காளரின் வாக்குகளைப் பெற்றுள்ளார்.

ராணுவத்தின் உதவியுடன் டிகால் அதிகாரத்திற்கு வந்து அதே ராணுவ மிரட்டலுடன் நடத்திய தேர்தல் இது. தேர்தலுக்கு முன்புதான் அணுகுண்டு தயார் செய்து விட்டதாகவும், அதைத் தக்க தருணத்தில் வெடிக்கப்போவதாகவும் டிகால் அறிவித்ததை வாசகர்கள் அறிவார்கள்.

துப்பாக்கிமுனையில் அல்ஜீரியாவில் வாக்காளர்கள் பதிவு செய்யப்பட்டதையும், அதை எதிர்த்தவர்கள் சுட்டுக்கொல்லப்பட்டதையும் வாசகர்கள் அறிவார்கள்.

தனக்கு ஆதரவாகவே அல்ஜீரிய முஸ்லீம் வாக்காளர்கள் வாக்களித்துள்ளதாகக் கூறும் பிரெஞ்சின் ஆதிக்கக்காரர்கள், 5 லட்சம் பிரெஞ்சுக்காரருள்ள ராணுவத்தை அல்ஜீரியாவில் வைத்துக் கொண்டுதான் தேர்தல் நடத்தினர்கள் என்பதை மறந்துவிடக்கூடாது.

இத்தகைய பயங்கர அடக்குமுறையையும், கட்டுப்பாடான கேவலமான கம்யூனிஸ்டு எதிர்ப்பிரச்சாரத்தையும் மீறி 20 சதவிகிதம் வாக்காளர்கள் பிரெஞ்சு நாட்டுக் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் ஏனைய ஜனநாயக வாதிகளுக்கும் வாக்களித்திருக்கிருர்ளென்ருல், அது, ஜனநாயகத்தின் பிறப்பிடமான பிரான்ஸ் இன்னும் அழிந்துவிடவில்லை என்பதன் அறிகுறி. சீக்கிரமே, டிகாலின் பாஸிஸ்டு ஏகாதிபத்திய வெறியர்களுக்கு மரண அடிகொடுக்கக்கூடிய, ராணுவம்போன்ற பலமும் உறுதியும் வாய்ந்த ஒரு இரும்புத் தளம் அது என்பதையே காட்டுகிறது.

டிகாலின் சர்வாதிகாரத்திற்கும், அவரது ஆதிக்கத்திற்கும் இந்தத் தேர்தலில் ஒரு முடிவு கண்டுவிட்ட காலனி நாடுதான் ஆப்ரிக்காவிலுள்ள கினியா. பொருளாதார உதவியை ரத்து செய்துவிடுவேன் என்று மிரட்டி இருந்தபோதிலும் கூட டிகாலுக்கு எதிராகவே, ஓட்டளித்தது கினியா. இது அங்குள்ள ஜனநாயக இயக்கத்தின் பலத்தின் அறிகுறி.

### வலதுசாரி சோஷலிஸ்டுகள் துரோகம்

பிரான்சில் டிகாலுக்கு இவ்வளவுபெரும் வெற்றி தேடித் தந்ததற்கு பெரும் பொறுப்பாளியாகத் திகழ்வது பிரான்சு நாட்டில் கைமொலே என்பவரின் தலைமையிலுள்ள வலதுசாரி சோஷலிஸ்டுகள். கொள்கைக்கும் தம் தேசத்திற்கும் மாபெரும் துரோகமிழைத்துள்ளனர். டிகாலேயை அவர்கள் ஆதரித்ததுதான் டிகாலின் வெற்றிக்கு முக்கிய காரணம். அல்ஜீரியாவையும், ஏனைய பிரெஞ்சுக் காலனிகளையும் என்றென்றும் அடிமையாக வைத்திருக்க இதுவரை வற்புறுத்தி வந்த அவர்கள் பாஸிஸ்டுத் தளபதி டிகாலுடன் சேர்ந்துகொண்டதில் ஆச்சர்யமில்லை.

கம்யூனிஸ்டுகளுடன்வலதுசாரி சோஷலிஸ்டுகள் சேர மறுத்ததாலேயே டிகால் ஆட்சிக்கு வரமுடிந்தது. இன்று பாஸிஸ்டு சர்வாதிகாரத்தை ஏற்படுத்தவும் முடிந்தது. பிரெஞ்சு முதலாளிகளையும், பாஸிஸ்டுகளையும் வெறுப்பதைவிட கம்யூனிஸ்டுகளை அதிகமாக அவர்கள் வெறுப்பதனுலே அவர்கள் இன்று சோஷலிஸக் கொள்கையையும், பிரெஞ்சு ஜனநாயகத்தையுமே பாஸிஸ்டுகளிடம் காட்டிக் கொடுத்தனர். இத்தகைய சோஷலிஸ்டுகளைத்தான் நம் நாட்டு ஜெயப்பிரகாசர்களும், அசோகமேத்தாக்களும் போற்றுகின்றனர்.

இன்று பிரெஞ்சு ஜனநாயகம் வீழ்ச்சியடைந்துள்ளது ஆனால் இது ஒரு தற்காலிக வீழ்ச்சிதான். எந்த பிரெஞ்சு முதலாளிகளும் பாஸிஸ்டுகளும் அன்று பிரான்ஸை ஹிட்லரிடம் காட்டிக்கொடுத்தார்களோ அதே பாஸிஸ்டுகள்தான் இன்று டிகாலின் தலைமையில் அதிகாரத்திற்கு வந்து விட்டார்கள். தேர்தல் நடந்தவுடன் டிகால், ஹிட்லரின் வாரிசு மேற்கு ஜெர்மன் தலைவர் அடினுரைச் சந்தித்துப் பேசியது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும். ஜனநாயகத்தையும் கம்யூனிஸத்தையும்ஒடுக்கவே இந்தச்சாகசம்.

ஆனுல் அன்று ஹிட்லரும் அவனது பிரெஞ்சுக் கையாள்களாக இருந்த பீட்டயின்களும் முறியடிக்கப்பட்டது போலவே, மீண்டும் அதே கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைமையின் கீழ், பிரெஞ்சுத் தொழிலாளி வர்க்கத்தின் தலைமையின் கீழ் டிகாலும் அவரைச் சூழ்ந்துள்ள பாஸிஸ்டுகளும் முறியடிக்கப்படுவர் என்பது திண்ணம், மீண்டும் பிரான்ஸ் அதன் பழைய மகோன்னதமான லட்சியத்துடன் வாழும் என்பதில் ஐயமில்லை.

# காங்கிரஸ்காரர்கள் பதவி வெறியர்கள் !

## காந்திஜியை மறந்துவிட்டார்கள்

### கே. எம். முன்ஷி கூறுகிருர்

பம்பாய், அக். 2—

காந்திஜியை காங்கிரஸ்காரர்கள் மறந்துவிட்டார்கள். அவரது போதனையை அவர்கள் புறக்கணித்துவிட்டார்கள். இந்த உண்மையை காங்கிரஸ்காரர்கள் ஒப்புக்கொள்ளவேண்டும்.

இவ்விதம் உத்திரப் பிரதேச முன்னுள் கவர்னரான கே. எம். முன்ஷி இங்கு நடைபெற்ற காந்தி ஜெயந்தி கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

அவர் மேலும் பேசுகையில், காந்திஜியின் கீழ் காங்கிரஸ் ஒரு கட்டுப்பாடு மிக்க ஸ்தாபனமாக இருந்தது; தன்னலமற்று மக்களுக்குச் சேவை செய்யும் ஸ்தாபனமாக இருந்தது. ஆனுல் இன்று நிலை என்ன? நமது கட்டுப்பாடு போய்விட்டது. பல ராஜ்யங்களில் காங்கிரஸ்காரர்கள் பதவி வெறிபிடித்தலைகிருர்கள். இதனுல் காங்கிரஸ்காரர்களே காங்கிரஸ்காரர்களை எதிர்த்து சண்டை போடவும், ஒருவரையொருவர் தூற்றவும் தலைப்பட்டு விட்டார்கள். இந்தப் பதவி மோகம் நமது சேவா உணர்ச்சியையே குன்ற வைத்துவிட்டது என்ருர்.

(பி. டி. ஐ.)

### கிளர்ச்சிகளில் ரௌடிகளை நுழைய விடாதீர்

#### விநோபாபாவே வற்புறுத்தல்

சூரத், அக். 2—

குண்டா சக்திகள் பயன் படுத்திக் கொள்ளும் நிலைமை ஏற்படும் அளவுக்கு எந்தக் கிளர்ச்சியும் நடத்தப்படக்கூடாது என்று விநோபாபாவே இன்று இங்கு கூறினுர். கிளர்ச்சிகளை எந்த அளவுக்கு நடத்த வேண்டும் என்பது பற்றி அரசியல் தலைவர்கள் மகாநாடுகளைப் பெற வேண்டுமென்றும் எவ்விதத்திலும் ஒரளவு சக்திகள் நிலைமையை சாதகமாக்கிக் கொள்ளவிடக் கூடாது என்றும் அவர் தெரிவித்தார். இத்தகைய ஒரு மகாநாடு கூட்டுவதற்கு தனது ஒத்துழைப்பை நல்க தயாராக இருப்பதாகவும் அறிவித்தார். (பி. டி. ஐ.)

### இந்தியா 1958 பொருட் காட்சி

#### அடுத்த வாரம்தான் நடைபெறும்

புதுடெல்லி, அக். 2—

அக்டோபர் 4-ம் தேதி ஆரம்பமாவதாக இருந்த 'இந்தியா 1958 பொருட் காட்சி' அடுத்த வாரம் தொடங்கும் என்று அறிவிக்கப்படுகிறது. பிரதமர் நேருவைக் கலந்துகொண்டு நிர்ணயமான தேதி அறிவிக்கப்படும். கடுமையான மழையால் பொருட் காட்சி வேலைகள் திட்டப்படி நடைபெருததாலேயே இந்த ஒத்திவைப்பு என்று கூறப்படுகிறது. (பி. டி. ஐ.)

### டோகோலேண்டுக்கு 1960-ல் சுதந்திரம்

#### தர்மகர்த்தா ஆட்சியை கைவிட பிரெஞ்சு முடிவு

பாரிஸ், அக். 2—

டோகோலேண்டு மீது செலுத்திவரும் தர்மகர்த்தா ஆட்சியை 1960-ல் முடித்துக் கொண்டு அந்நாட்டுக்கு பூரண சுதந்திரமளிக்க பிரான்ஸ் முடிவு செய்துள்ளது. ஐ. நா.வின் தீர்மானத்துக்கிணங்கவே இந்த முடிவு செய்யப்பட்டுள்ளது. டோகோலேண்ட் என்பது கணுவுக்கும் பிரெஞ்சுப் பிரதேசமான டகோமேக்கும் இடையிலுள்ள தேசமாகும். இதன் ஜனத்தொகை 10 லட்சம். (ராய்ட்டர்)

### கினியாவுக்கு புதிய சர்க்கார்

#### செகௌ டூரே புதிய பிரதமர்

பாரிஸ், அக். 2—

கினியாவின் தேசிய சட்டசபை 36 வயது நிரம்பிய பழைய பிரதமரான செகௌடூரேயையே புதிய பிரதமராகத் தேர்ந்தெடுத்தது. அவரே வெளிநாட்டு அமைச்சராகவும், தற்காப்பு அமைச்சராகவும் இருப்பார். புதிய அமைச்சரவையில் மொத்தம் 11 பேர்கள் இருப்பர். கினியா ஐ. நா.வில் அங்கம் வகிக்க சீக்கிரமே மனு செய்துகொள்ளும். (ராய்ட்டர்)

### கினியா சுதந்திரக் குடியரசாகிறது

#### பிரஞ்சு ஆதிக்கம் ஒழிந்தது

கோனுக்ரி, அக். 2—

கினியா இன்று ஒரு சுதந்திர குடியரசாகப் பிரகடனம் செய்யப்பட்டது. பிரதேச சட்டசபை தலைவரே அப்பிரகடனத்தை வெளியிட்டார். இத்துடன் 68 வருஷ பிரெஞ்சு ஆதிக்கம் அடியோடு ஒழிக்கப்பட்டது.

### கேரளத்திற்கு கோரே விஜயம்

கொல்லம், அக். 2—

அ. இ. பி சோ. கட்சி பொதுக் காரியதரிசி எம். வி கோரே 18-ந் தேதி வாக்கில் இங்குவந்திறங்கி 11 நாள் கேரளத்தில் சுற்றுப் பிரயாணம் செய்வாரென்று தெரிகிறது.

ரிக்ஷா தொழிற்சங்கத்தையும் மோட்டார் தொழிற் சங்கத்தையும் அவர் ஆரம்பித்துவைப்பார்.

### ஆசிரிய மாணவர்மீதுள்ள வழக்குகள் அனைத்தும் வாபஸ் பெறப்படும்

திருவனந்தபுரம், அக். 2—

ஆசிரிய மாணவர்களின் கிளர்ச்சியின் விளைவாக அவர்கள் மீது தொடரப்பட்ட வழக்குகளையெல்லாம் வாபஸ் பெறும்படி சர்க்கார் உத்திரவு பிறப்பித்துவிட்டது. கிளர்ச்சி சம்பந்தமாக கைதானவர்களும் விடுதலை செய்யப்படுவர்.

# மூணறு ஓர்க்ஷாப்பில் வேலை நிறுத்தம்

## செங்கொடிச் சங்க ஆதரவு

மூணறு, அக். 1—

இங்கு கண்ணன் தேவன் கம்பெனி ஓர்க்ஷாப்பில் வேலை செய்யும் 190 தொழிலாளர்களும் 29-8-58 முதல் வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர்.

போனஸ், சம்பள உயர்வு முதலிய பல கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் நடைபெறுகிறது. மூணறு சுற்று வட்டாரத்திலுள்ள தோட்டத் தொழிலாளர்களுக்கும், ஆபீஸ் குமாஸ்தாக்களுக்கும், சமீபத்தில் 15 சதவிகிதம் முதல் 20 சதவிகிதம் வரை சம்பள விகிதம் கூடுதலாக்கப்பட்டுள்ளது. ஆனுல் ஓர்க்ஷாப் தொழிலாளர்களுக்கு எந்தவித சலுகைகளும் கொடுக்கப்படாததால், யாவரும் ஒன்றுசேர்ந்து தங்களது மூணறு எஞ்சினீயரிங் ஓர்க்கர்ஸ யூனியன் தலைவர் திரு. சங்கரன் குட்டி மூலமாய், கம்பெனியாருடன் பேச்சுவார்த்தை நடத்தியும் எவ்வித பலனுமில்லாததால் வேலை நிறுத்தம் செய்கிருர்கள். முதல் நாள் கோஷங்களை இடியென முழக்கிக் கொண்டு ஊர்வலமாகச் சென்று மூணறு மலைகளையே அதிர வைத்து விட்டனர்.

இரண்டாவது நாள் தேவிகுளம் எஸ்டேட் ஓர்க்கர்ஸ் யூனியன் (செங்கொடி) நிர்வாகிகளும், மானேஜிங் கமிட்டி உறுப்பினர்களுமாக 500 பேர் ஊர்வலமாக ஓர்க்ஷாப்புக்குச் சென்று ஆதரவு தர, பின்பு அவர்களும் இவர்களுடன் சேர்ந்து மாபெரும் ஊர்வலம் மூணறு நகரையே கோஷ முழக்கங்களால் அதிர வைத்துவிட்டது. கம்பெனி நிர்வாகிகள் ஊர்வல ஆர்ப்பாட்டத்தைக் கண்டு பிரமித்துநின்ருர்கள்.

### தொழிலாளருக்கு கேரள சர்க்கார் செய்த நன்மைகள்

#### தோட்டத் தொழிற்சங்க செயலாளர் பாராட்டு

மூணறு, செப். 30—

ராஜக்காடு எஸ்டேட்டில் ஏலத் தோட்டத் தொழிலாளரின் மாபெரும் கூட்டம் ஜோசப் சாவேலி தலைமையில் நடந்தது. மாதவன் எல்லோரையும் வரவேற்ருர்.

அடுத்தபடி தேவிகுளம் தோட்டத் தொழிலாளர் சங்கச் செயலாளர் பி. ஸ்டேன்லி பேசினுர். கேரளத்தில் கம்யூனிஸ்டு ஆட்சி ஏற்பட்டபின் தொழிலாளருக்கு ஏற்பட்ட நன்மைகளை விவரித்தார். "குறைந்த பக்ஷ கூலி நாள் ஒன்றுக்கு ஆண்களுக்கு ரூ. 1-11-6வும் பெண்களுக்கு 1-5-0வும் கேரள அரசாங்கத்தாராலே நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அதோடு, இருபது நாள் வேலை செய்யும் தொழிலாளருக்கு ஒரு நாள் லீவும், சுதந்திர, குடியரசு, மே தினங்களில் சம்பளத்துடன் விடுமுறை, அலவன்ஸ், கம்பளி, வீட்டுவசதி, வைத்திய உதவி, பாலகர்களுக்குப் பள்ளி வசதி முதலிய வசதிகள் செய்து கொடுத்த கேரள சர்க்காரை பாட்டாளிகள் புகழ்வதில் ஆச்சரியமில்லை. காங்கிரஸின் பொய்ப் பிரசாரத்தை தொழிலாளர் நம்பவே போவதில்லை" என்ருர். சங்க செயலாளர் நாராயணன் நன்றி கூறினுர்.

# பாகிஸ்தான் அரசியல் அலங்கோலம்

## மொத்த உறுப்பினரில் 3-ல் 1 பகுதி மந்திரிகள்

### நூன் சர்க்காரில் அவாமிலீக் சேருகிறது

கராச்சி, அக். 2—

பாகிஸ்தானில் ஆட்சி புரியும் நூன் சர்க்காரில் இன்று அவாமி லீக் சேர்ந்தது. கடந்த 10 மாதங்களாக இந்தச் சர்க்காரில் சேர அவாமி லீக் மறுத்து வந்தது.

அவாமி லீகைச் சேர்ந்த 6 பேர்களுக்கும் குடியரசுக் கட்சியைச் சேர்ந்த ஒருவருக்கும் இன்று ஜனதிபதி மிர்ஸா பதவிப் பிரமாணம் செய்து வைத்தார்.

இவர்களைச் சேர்த்து தற்போது நூன் சர்க்காரிலுள்ள மந்திரிகளின் எண்ணிக்கை 26 ஆகிறது. இது தேசீய அசெம்பிளியில் மொத்தமுள்ள 80 உறுப்பினர்களில் சற்றேறக் குறைய மூன்றில் ஒரு பகுதியாகும். இப்போது நூன் மந்திரி சபையில் மொத்தம் 6 கட்சிகள் கூட்டுச் சேர்ந்துள்ளன.

#### இலாகா பிரிவினையில் தகராறு

இதற்கிடையே நிதி இலாகாவை யார் வைத்திருப்பது என்பது பற்றி தகராறு கிளம்பியுள்ளது.

ஏற்கனவே நிதிமந்திரியாக இருக்கும் அம்ஜத் அலி வெளிநாடு சென்றிருப்பதால் தற்காலிகமாக ஹமிதுல் ஹக் நிதி இலாகா பொறுப்பை ஏற்றிருந்தார். இப்போது அம்ஜத் அலி பாகிஸ்தான் திரும்பியபிறகும் தாமே தொடர்ந்து நிதி மந்திரி பொறுப்பை வகிக்கப்போவதாக ஹமிதுல்ஹக் கூறுகிருர். அம்ஜத் அலி தாம்தான் அப்பொறுப்பை வகிக்கப் போவதாகக் கூறுகிருர். இந்தச் 'சண்டை ஒரு முதல் தர நெருக்கடியை ஏற்படுத்தி யுள்ளது. இது போதாது என்று அவாமி லீக் தலைவர் சுராவர்த்தி இன்னெரு நெருக்கடியை ஏற்படுத்தியுள்ளார். அதாவது கிழக்குப் பாகிஸ்தானில் தமது அவாமி லீக் மந்திரி சபையை ஆதரிக்காதவர்களை மத்திய சர்க்கார் மந்திரி சபையிலிருந்து விலக்கவேண்டும் என்று வற்புறுத்தி வருகிருர். இத்தகைய நெருக்கடிகள் என்ன நிலையில் போய் முடியுமோ என்று அரசியல் வட்டாரத்தினர் கவலை கொண்டுள்ளனர். (பி டி. ஐ.)

### சியாங்கே ஷேக்குக்கு டல்லஸ் ஆறுதல்

வாஷிங்டன், அக். 2—

பார்மோசா ஜலசந்தியில் கம்யூனிஸ்ட் சீனு சுடுவதை நிறுத்தினுல், குமாய், மட்சு தீவுகளில் ஏராளமான கோமிண்டாங்படைகளை நிறுத்திவைப்பது முட்டாள்தனமாகும், என்று டல்லஸ் இரு தினங்களுக்கு முன் கூறியிருந்தாரல்லவா? இவ்வாறு கூறியது பார்மோசாவில் கோமிண்டாங் கட்சியினரிடையே பெரிய அதிருப்தியைக் கிளப்பிவிட்டுவிட்டதாம்! ஆகவே தன்னுடைய அறிக்கையால் ஏற்பட்டதப்பபிப்பிராயத்தைப் போக்குவதற்காக டல்லஸ், பார்மோசாவிலுள்ள அமெரிக்க ஸ்தானிகர் மூலம் சியாங்கே ஷேக்குக்கு ஆறுதல் வார்த்தை அனுப்பியுள்ளாராம்.

### டாக்டர் மேரி ஸ்டோப்ஸ் மரணமடைந்தார்

லண்டன், அக். 2—

நவீன கர்ப்பத்தடை முறைகளைப் பற்றி போதனை செய்த ஆரம்பகர்த்தாவான, டாக்டர் மேரி கார்மைக்கல் ஸ்டோப்ஸ் தமது 78 வயதில் இங்கு இன்று காலமானுர்.

# சோவியத் முன்னேற்றம் பிரமிப்பானது

## மக்கள் கவலையற்று வாழ்கின்றனர்

### சோவியத் ரஷ்ய விஜயம் பற்றி மைசூர் முன்னுள் முதலமைச்சர்

ஆண்டர்சன்பேட்டை, செப். 30—

ரஷ்யாவின் வளர்ச்சி பிரமிப்பளிப்பதாக இருக்கிறது என்று அண்மையில் சோவியத் யூனியனில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டுவந்த மைசூர் ராஜ்ய முன்னுள் முதல் அமைச்சர் ஹனுமந்தையா இன்று இங்கு பேசினுர்.

கோலார் தங்கவயல் நகர்நல குழுவின் ஆதரவில் இராபர்ட்சன் பேட்டையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறு தெரிவித்தார். அவர் மேலும் பேசியதாவது:

சோவியத் சர்க்காரும் மக்களும் வெளிநாடுகளிலிருந்து வருபவர்களை மிகுந்த அன்போடு வரவேற்கின்றனர். இதர நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் சோவியத் யூனியனில் மிகச் சிறந்த பல அம்சங்கள் இருக்கின்றன. அங்கே ஒரே அரசியல் கட்சித் தலைமையில் ஜனங்கள் மிகக் கட்டுப்பாடாக நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுகின்றனர்.

#### தனிச் சொத்துரிமை ஏன் இல்லை ?

அங்கு தனிச் சொத்துரிமை இல்லை. சொந்த உபயோகத்திற்குச் சொத்துகள் உண்டு. ஆனுல் இந்தியாவில் தனிச் சொத்துரிமை இருக்கிறது. ரஷ்யாவில் மட்டும் தனிச் சொத்துரிமை ஏன் இல்லை?

உழைக்கும்வரை மக்கள் சகல வசதிகளும் பெறுகின்றனர். வயோதிக காலத்தில் சாகும்வரை சர்க்கார் பாதுகாப்பு உண்டு. பிள்ளைகளுக்கு ஆரம்பக்கல்வி முதல் சர்வகலாசாலைபடிப்புவரை இலவசம். அவ்வாறு அளிக்கும்போது தனிச்சொத்து அவசியமில்லை. நமக்கு வயோதிக காலத்திற்கும் பிள்ளைகள் படிப்பதற்கும்தானே சொத்து அவசியப்படுகிறது.

#### நல்லொழுக்கத்தில் அக்கறை

ரஷ்யர்கள் நாஸ்திகர்கள்; கெட்டவர்கள் என்று யாராவது சொன்னுல் அதை நீங்கள் நம்ப வேண்டாம். லண்டன், பாரீஸ், நியூயார்க் சென்ருல் விபச்சார விடுதிகளைக் காணலாம். இந்தியாவிலும்கூட பம்பாய் போன்ற இடங்களில் அவைகள் இருக்கின்றனர். ஆனுல் ரஷ்யாவில் விபச்சார விடுதிகளைக் காண முடியாது. கம்யூனிஸ்ட் சர்க்கார் மக்களின் நல்லொழுக்கத்தில் மிகுந்த அக்கறை காட்டுகிறது. ரஷ்யர்கள் போல் நாமும் முன்னேற வேண்டுமானுல் கடின உழைப்பும் நெருங்கிய ஒத்துழைப்பும் வேண்டும். இந்த வகையில் காங்கிரஸ் கம்யூனிஸ்டு சக்திகள் ஒன்றுபட்டு வேலை செய்தால் நாடு முன்னேற்றம் துரிதமடையும்.

#### வர்க்கபேதமற்ற சமுதாயம்

வர்க்கபேதமற்ற சமுதாயத்தையே காந்திஜி போதித்தார். ஆனுல் இன்று ஜாதி, மதம், வர்க்க அடிப்படையில்தான் இந்தியாவில் பல மந்திரி சபைகள் இயங்குகின்றன. காங்கிரஸ் கட்சிக்குள் பிளவுகள், கோஷ்டிச் சண்டைகள் மலிந்துவிட்டன. இந்நிலை கண்டு நாணயஸ்தர் எவரும் வெட்கப்படத்தான் செய்வர்.

காங்கிரஸில் 4 அணு கொடுத்தோ கொடுக்காமலோகூட அங்கத்தினர்களாக சுலபமாகச் சேர்ந்துவிடலாம். கம்யூனிஸ்ட் கட்சியில் அவ்வாறல்ல. ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சியில் சிறந்த அறிஞர்கள், உழைப்பாளிகள், ஒழுக்கம், கட்டுப்பாடு உடையவர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், விஞ்ஞானிகள் முதலியோர் அங்கத்தினர்களாக உள்ளனர். கம்யூனிஸ்ட் கட்சியில் சேருவதை ஒரு பெரும் பேராக அவர்கள் கருதுகின்றனர்.' இவ்விதம் அனுமந்தய்யா கூறிமுடித்தார்.

ஜே. பாப்ஞ, பெருமாள், அருள்தாசன், பி. என். இராமசாமி அய்யர், ஜே. டி. கோபால கிருஷ்ண முதலியோரும் பேசினர். (ந. கி.)

# தி. மு. க. வினுல் நாட்டுக்கு நன்மை கிடையாது

## காவேரிநகரில் எட்டயபுரம் தேவன் பேச்சு

சென்னை, அக். 2—

காவேரி நகரில் இன்று ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. ஆர். முனியாண்டித் தேவர் தலைமை வகித்தார். முதலில் டி. குருசாமி பேசுகையில் காவேரி நகரில் நாம் கட்டி வளர்த்துவரும் தொழிற்சங்கத்தை சீர்குலைக்க தி. மு. கவினர் முயற்சிக்கின்றனர் என்றும், இதனை முறியடித்து மேலும் பலப்படுத்த வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். டி. வீரபத்திரன் திருச்சி பீடித் தொழிலாளர்கள் போராட்டத்தில் தி. மு. க.வினர் செய்த துரோகத்தை அம்பலப்படுத்தினுர்.

#### தலைமையின் போக்கு

பின்னர் எட்டயபுரம் தேவன் பேசுகையில், தி. மு. க.வில் ஏராளமான ஊழல்கள் மலிந்து இருக்கிறதென்றும் தி. மு. க. தலைமையின் போக்கால்தான் தூத்துக்குடியில் பல கொலைகள் நேர்ந்தன என்றும் கூறினுர். தி. மு. க.வினர் எனக்குப் பல மொட்டைக் கடிதங்கள் எழுதியுள்ளார்கள். அதில் உயிர் ஜாக்கிரதை என்று எச்சரித்துள்ளார்கள். இத்தகைய பயமுறுத்தல்களுக்குத் தொழிலாளர் வர்க்கம் சரியான பதில் கொடுக்கும் என்று தேவன் கூறினுர்.

#### இரு துருவங்கள்

நான் தி.மு.க.விலேயே இருந்ததில்லை என்று அந்தக் கட்சியைச் சேர்ந்த தலைவர்கள் கூறுகின்றனர். நான் அந்த ஸ்தாபனத்தில் பல ஆண்டுகள் பணியாற்றினேன் என்பதற்கு இதோ அத்தாட்சி என்று சில தஸ்தாவேஜுகளை கூட்டத்தில் படித்துக் காண்பித்தார். தி. மு. க. வின் செல்வாக்குத் தேய்ந்து வருகிறது என்பதற்கு திருச்சி பீடித் தொழிலாளர் போராட்டம் ஒரு எடுத்துக்காட்டு என்ருர்.

அண்ணுதுரை, நெடுஞ்செழியன் முதலியவர்களோடு சாதாரண ஊழியர்கள் நெருங்கிப் பழகவோ பேசவோ முடியாது. அதற்குமாருகக் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்களோடு சாமான்ய ஊழியர்கள் மிக நெருங்கிப் பழக முடிவதை அனுபவரீதியாகப் பார்ப்பதாகத் தெரிவித்தார்.

### உரம் வாங்க கடன் உதவி

#### கலெக்டருக்கு விவசாய சங்க மகஜர்

தாராபுரம், செப். 30—

கொளிஞ்சிவாடியிலும் சுற்று வட்டாரங்களிலுமுள்ள குத்தகை விவசாயிகளுக்கு உரம் வாங்க சர்க்கார் கடன் உதவி அனுமதிக்க வேண்டுமென்று தாராபுரம் விவசாய சங்கத்தின் சார்பில் ஜில்லா கலெக்டருக்கு மகஜர் அனுப்பப்பட்டிருக்கிறது. அந்த மகஜரில் நூற்றுக்கு மேற்பட்ட விவசாயிகள் கையொப்பமிட்டிருக்கிருர்கள்.

### ஓட்டல் தொழிலாளி தாக்கப்பட்டதற்குக் கண்டனம்

பூதப்பாண்டி, செப். 30—

கிருஷ்ணன்குட்டி என்ற ஓட்டல் தொழிலாளியைப் போலீஸ் அதிகாரி ஒருவர் காரணமில்லாமல் நடுத்தெருவில் தாக்கியதாகக் கூறப்பட்டதுபற்றி கண்டித்து சமீபத்தில் ஒரு பொதுக்கூட்டம் பூதப்பாண்டி கம்யூனிஸ்ட் கட்சி கிளை உதவிக் காரியதரிசி முத்துக்கருப்பன் தலைமையில் நடந்தது. தக்க நடவடிக்கை எடுக்கும்படி சர்க்காரை கூட்டம் வற்புறுத்தியது.

### ஓட்டல் தொழிலாளருக்கு நஷ்டயீடு

புதுக்கோட்டை, செப். 30—

கிருஷ்ண பவனிலிருந்து வேலையிலிருந்து நீக்கப்பட்ட செல்லப்பன், பாலசுப்ரமணியம், சீனிவாசன், கமலாபவன், ஆறுமுகம் இவர்களுக்கு தொழில் சமரச அலுவலர் தலையீட்டால் நஷ்டயீடு தரப்பட்டது.

பாம்பே ஆனந்த பவனிலிருந்து நீக்கப்பட்ட மார்த்தாண்டன், சுந்தரராஜன், ராமன் நம்பூதிரி இம் மூவருக்கும் நஷ்டயீடு தரப்பட்டது.

# லெபனனில் ஐ. நா. பார்வையாளர்

## எண்ணிக்கையை அதிகரிக்கக் கோரிக்கை

ஐக்கிய நாடுகள் சபை, அக் 1—

லெபனனிலுள்ள ஐ. நா. பார்வையாளர் குழு, தனது நாலாவது அறிக்கையில் பார்வையாளர் எண்ணிக்கையை உடனடியாக அதிகரிக்க வேண்டுமெனப் பாதுகாப்புச் சபையைக் கேட்டுக் கொண்டிருக்கிறது. பார்வையாளர்கள் எண்ணிக்கை கூடுதலாக இருந்தால்தான் திறமையான நடவடிக்கைகள் மேற்கொள்ள இயலும் என்றும் தெரிவித்திருக்கிறது.

லெபனனுக்குள் சட்டவிரோதமான ஊடுருவல் நிகழ்ச்சிகள் ஏதும் நடைபெறவில்லை என்று அந்த அறிக்கை மேலும் கூறுகிறது.

லெபனன் எல்லையோரத்தில் ஊடுருவல்கள் ஏதும் நிகழவில்லை என்று பார்வையாளர் குழு கூறுவது இது நான்காவது தடவையாகும்.

ஆனுல் லெபனன் விவகாரம் பாதுகாப்புச் சபைக்குக் கொண்டு வரப்பட்டபொழுது லெபனனின் உள்விவகாரங்களில் ஐக்கிய அரபு லீக் அதிக அளவில் தலையிட்டு வருவதாக லெபனன் நாட்டின் பிரதிநிதி டாக்டர் சார்லஸ்மாலிக் (இப்பொழுது பொதுச் சபையின் தலைவராயிருப்பவர்) புகார் செய்திருந்தார்.

### குமாய், மட்சு தீவுகளுக்கு சப்ளை அனுப்ப புதிய அமெரிக்க விமானங்கள்

தைவான் (பார்மோஸா), அக். 2—

முற்றுகைக்கு உட்பட்டுள்ள குமாய், மட்சு தீவுகளுக்கு சப்ளைகளை அனுப்புவதற்கான புதிய முயற்சிகளில் உதவுவதற்காக "சி-119 பறக்கும் பெட்டிக்காரர்கள்" என்று சொல்லப்படும் புதிய அமெரிக்க விமானங்கள் வந்துள்ளன.

மொத்தம் இத்தகைய 16 விமானங்கள் வரப் போகின்றனவாம். ஒவ்வொன்றும் 15 டன் எடையுள்ள சப்ளைகளைத் தூக்கிச் செல்லும் சக்தியுள்ளனவையாம்.

பார்மோசாவுக்கும் குமாய், தீவுகளுக்கும் இடையில் உள்ள 125 மைல் தூரத்தைக் கடந்து இந்த விமானங்கள் ஒவ்வொரு இரவிலும் 3 அல்லது 4 தடவை சப்ளைகளை ஏற்றிச் செல்ல திட்டமிடப்பட்டுள்ளதாம்.

### வண்ணரப்பேட்டை சற்குண கபே கதவடைப்பு

சென்னை, அக். 4—

சென்னை வண்ணரப்பேட்டையிலுள்ள சற்குண கபே ஓட்டல் முதலாளி, நோட்டீஸ் கொடுக்காமல் சட்ட விரோதமாகக் கதவடைப்பு செய்துள்ளார். அவர் லேபர் ஆபீசுக்கும் வரமறுக்கிருர். சர்க்கார் இதில் தலையிட்டு தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று சென்னை நகர ஓட்டல் தொழிலாளர் சங்கக் காரியதரிசி கேட்டுக்கொள்ளுகிருர்.

### திருச்சி ஜில்லா நூல் ஆலை அலுவலர் சங்கம்

#### சம்பள உயர்வு, கிராஜுடி கோரிக்கைகள்

திருச்சி, செப். 30—

உமாநாத்தை தலைவராகவும், நரசிம்மனை காரியதரிசியாகவும் கொண்டு இயங்கி வந்த காவேரி நூல் ஆலை அலுவலர் சங்கத்திற்கும் நிர்வாகத்திற்கும் ஒப்பந்தம் ஏற்பட்டதும் பல நூல் ஆலைகளில் வேலை பார்க்கின்ற அலுவலர்கள் இச்சங்கத்தில் அங்கத்தினராகப் பிரியப்பட்டனர். எனவே, ஜெனரல்பாடி கூட்டத்தில் காவேரி மில் நூல் ஆலை அலுவலர் சங்கம் திருச்சி மாவட்ட நூல் ஆலை அலுவலர் சங்கம் என்று மாற்றப்பட்டது இச்சங்கம் மாவட்ட சங்கமாக மாற்றப்பட்டதுமே கரூர் மில்லில் வேலை பார்க்கின்ற அலுவலர் அத்தனை பேருமே மொத்தமாக இச்சங்கத்தில் அங்கத்தினரானுர்கள். கரூர் மில் அலுவலர்கள் மகாசபைகூடி, மாவட்ட சங்கத்தின் கரூர் மில் கிளையும் அமைக்கப்பட்டது. கரூர் மில் அலுவலர்கள் சார்பாக சங்கம், மில் நிர்வாகத்தின் முன் கீழ்க்கண்ட தீர்மானங்களை சமர்ப்பித்துள்ளது.

கோயமுத்தூரில் நூல் ஆலைகளில் வேலை பார்க்கின்ற அலுவலர்களைப் போல் கரூர் மில் நிர்வாகத்தின் கீழ் வேலை பார்க்கின்ற அலுவலர்களுக்கும் சம்பள விகிதம் உயர்த்தப்பட வேண்டும்.

அதே போன்று அடிப்படைச் சம்பளம் நிர்ணயிக்கப்பட்டு சம்பள உயர்வும் கொடுக்கப்பட வேண்டும்.

கோயமுத்தூரில் ஆலை அலுவலர்களுக்கு வழங்கப்படுவதைப் போன்று பஞ்சப்படியும் கிராஜுடியும் வழங்கப்பட வேண்டும்.

திருச்சி ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் 7 கிளைகளும், மேற்படி அலுவலர்களின் கோரிக்கைகளுக்கு ஆதரவாக இருக்கின்றன.

### கேரள சாதனைகளுக்கு பாராட்டு

#### பெங்களூரில் பொதுக்கூட்டம்

பெங்களூர், அக். 1—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி பெங்களூர் ஜில்லா கமிட்டியின் சார்பில் சென்ற 27-ம் தேதி பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஜில்லா கமிட்டி உறுப்பினரும், கார்ப்பரேஷன் கவுன்சிலருமான டி. எஸ். ஸ்ரீராமுலு தலைமை வகித்தார். பெங்களூர் ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் எஸ். சூரிய நாராயண 'ஜமூர்' ஆசிரியர் அகமதுல்லாகான், கே. வஜ்ரவேலு ஆகியோர் கேரள சர்க்காரின் சாதனைகளைப் பாராட்டியும், கேரளம் பற்றி கூறப்பட்டு வரும் அவதூறுகளுக்குப் பதிலளித்தும் பேசினர். மைசூர் ராஜ்யத்தில் ஏற்பட்டுள்ள உணவு நெருக்கடியைப் போக்க சகல அரசியல் கட்சிகளையும் கொண்ட ஒரு மகாநாட்டைக் கூட்டி வழிவகுக்க வேண்டுமென்று ராஜ்ய சர்க்காரை வற்புறுத்தியும், மக்கள் சீனு மீது அமெரிக்க ஏகாதிபத்தியம் தொடுத்துள்ள ஆக்ரமிப்பைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. (ந. கி.)

### புதுக்கோட்டை மோட்டார் தொழிலாளர் சங்க விழா

புதுக்கோட்டை, செப். 30—

புதுக்கோட்டை மோட்டார் தொழிலாளர் சங்கம் புத்தாண்டிற்கு அடியிற் கண்ட நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தது:— என். சின்னராஜா; தலைவர்; எஸ். வேலுப்பிள்ளை; உபதலைவர்; எஸ். சுப்பிரமணியம், காரியதரிசி; பி ஆர். வெங்கட்ராமன் உப காரியதரிசி; பி. கந்தசாமி பொருளாளர்.

மேற்படி சங்கத்தின் முதலாவது ஆண்டுவிழா 17-8-58-ல் நடந்தது. எம். எஸ். கிருஷ்ணசாமி கொடியேற்றினுர். என். சின்னராஜா தலைமை வகித்தார். மாலையில் ஊர்வலம் நடந்ததும் அந்த ஊர்வலமே திலகர் மைதானத்தில் கூட்டமாக முடிந்தது.

தி. மு. க. தலைவர்கள் தொழிலாளர்களைப் பிளவுபடுத்தி போட்டி சங்கம் ஏற்படுத்த முயலுவதை சுப்ரமண்யம் கண்டித்தார். செங்கொடி சங்கத்தில்தான் அதிக அங்கத்தினர்கள் உண்டென்பதைச் சுட்டிக்காட்டினுர்.

வி. கிருஷ்ணமூர்த்தி எம். எல் ஏ. பேசுகையில் தொழிலாளர்கள் ஒற்றுமையுடனும் கட்டுப்பாடுடனும் இருக்க வேண்டுமென்ருர்.

தொழிலாளர்கள் ஒன்றுபட்டு போராட தமிழ் நாடு மோட்டார் சம்மேளனத்துடன் இணைக்கப்பட்ட அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸில் சேர வேண்டுமென்று கே. ஆர். பசுபதி கேட்டுக் கொண்டார்.

உமாநாத் பேசுகையில் மோட்டார் தொழிலாளரைக் காலவரையின்றி வேலை வாங்குவதால் விபத்துக்கள் நேரிடுகின்றனவென்றும் மோட்டார் தொழிலாளர் கோரிக்கைகள் வெற்றியடைய பொது மக்கள் உதவிபுரிய வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

### புதிய ரோடு போடுக !

#### முற்போக்கு வாலிபர் கழகத்தின் மனு

சென்னை, அக். 2—

சென்னை இராயபுரம் மூன்ருவது டிவிஷனைச் சேர்ந்த துலுகன் தோட்டம் 4-வது, 5-வது தெருக்களில் உள்ள ரோடு, மக்கள் நடமாட முடியாதபடி அசுத்தமும், ஆபாசமும் நிறைந்துள்ளதாக இருக்கிறது. மழைக்காலத்தில் ரோட்டில் நடப்பதென்பதே மிகுந்த அருவருப்பாகிவிடும். இதனுல் மக்களின் சுகாதாரம் மிகவும் பாதிக்கப் படுகிறது.

மழைக்காலம் நெருங்குவதால், இந்தத் தெருக்களில் புதிய ரோடு போடவேண்டுமென்று, துலுக்கன் தோட்டம் மெயின் ரோட்டிலுள்ள முற்போக்கு வாலிபர் கழகம், சென்னை நகர கார்ப்பொரேஷன் கமிஷனருக்கு மனுச் செய்துள்ளது.

### திருத்தங்கள்

28-9-58 தேதிய ஜனசக்தியில் ஆசிரியருக்கு கடிதங்கள் பகுதியில், 'உடுமலையிலிருந்து மூணறுக்கு 54 மைல்களுக்கு ரூ. 30 வசூலிக்கப்படுகிறது என்றிருப்பதை ரூ. 3 என்று திருத்தி வாசிக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறோம்.

●

1-10-58 தேதிய ஜனசக்தியில், வீரப்பன் சத்திரம் பஞ்சாயத் தேர்தலில் கம்யூனிஸ்ட் ஆதரவுடன் வெற்றிபெற்றவர் பட்டியலில் திரு. சாமியப்பன் என்பவரின் பெயரும் இருக்கிறது. இவர் எந்தக் கட்சியின் ஆதரவும் இல்லாமல் சுயேச்சையாக நின்று வெற்றிபெற்றவர்.

'நீலாவுக்கு நெறஞ்ச மனசு' படத்தில் நீலாவின் மூன்று தங்கைகள்

# தணிக்கை செய்யப்பட்ட 10 படங்கள் வெளிவரவில்லை!

## கச்சா பிலிம் கட்டுப்பாடே காரணம்!!

சகல வேலைகளும் முடிந்து, தணிக்கையாளர்கள் பார்த்து சர்ட்டிபிகேட்கொடுத்தபின்னரும் பத்து படங்கள் வெளிவர முடியவில்லை. பிரதிகள் எடுக்க கச்சா பிலிம் கிடைக்காததே இதற்குக் காரணமாகும்.

விஜயா பிலிம்ஸாரின் 'கடன் வாங்கி கல்யாணம்', கிருஷ்ணா பிக்சர்ஸாரின் 'மாங்கல்ய பாக்கியம்', சரவணபவா அண்டு யூனிட்டி பிக்சர்ஸாரின் 'நான் வளர்த்த தங்கை', சதர்ன் மூவீஸின் 'மாய மனிதன்', மற்றும் 'காத்தவராயனி கதா', 'அப்ப சேஸி பப்பு கூடு', 'அப்ப ஒக்க இண்டிதோடல்லு', 'பார்வதி கல்யாணம்' ஆகிய தெலுங்கு படங்கள் 'குடும்பப் பெண்', 'நவீன கொள்ளைக்காரன்' முதலிய டப்பிங் படங்கள் ஆகிய மொத்தம் பத்துப் படங்களும் வெளியிடப்படாமல் மூலையில் போட்டு வைக்கப்பட்டிருக்கின்றன.

கச்சா பிலிம் தட்டுப்பாட்டால் ஏற்படும் பயங்கர நிலைமைகளுக்கு இது ஒரு உதாரணம்.

## சிறுவர்களுக்கு தனி சினிமா

### வாரம் மூன்று நாட்கள்

மவுண்ட் ரோடிலுள்ள பழைய சட்டசபைக் கட்டிடம் குழந்தைகள் சினிமாத் தியேட்டராக மாறிவிட்டது. சில மாதங்களுக்கு முன்பு பிரதமர் நேருவால் ஆரம்பிக்கப்பட்ட இத்தியேட்டரில் சென்ற மாதம் முதன்முறையாக ஒருபடம் திரையிடப்பட்டது. நிதி அமைச்சர் சி. சுப்ரமண்யம் இதை ஆரம்பித்துவைத்தார்.

இனி வாரத்தில் வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று தினங்களில் இந்தத் தியேட்டரில் சிறுவர்களுக்கான படங்கள் திரையிடப்படும். மாலை 4 மணிக்கு காட்சி ஆரம்பமாகும். 16 வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்கு கட்டணம் 12 நயா பைசா தான். குழந்தைகளோடு வரும் பெற்றோர்களுக்கு கட்டணம் 25 நயா பைசா!

## நடிகர் ஓடிவிட்டார்! வருமான வரிக்கு பயந்து

சிங்களத்தில் பிரபல நகைச்சுவை நடிகரும், புகழ்பெற்ற கதாநாயகி ருக்மணிதேவியின் கணவருமான எட்டி ஜெயமனே இந்தியாவிலிருந்து தப்பி ஓடி விட்டார்.

மேற்படி தம்பதிகள் சென்னையிலும், பம்பாயிலும் படங்களில் நடித்தார்கள். சர்க்கார் இவர்களுக்கு 4 லட்சம் ரூபாய் வருமான வரி விதித்தது. எட்டி ஜெயமனே வரி கட்டவில்லை. ஆகவே இவரை இலங்கை செல்ல அனுமதிக்கவில்லை சர்க்கார். போலீஸ் கண்காணிப்பிலேயே இருந்தார்.

சில நாட்களுக்கு முன்பு தந்திரமாக மனைவி ருக்மணிதேவிக்கு இலங்கை செல்ல அனுமதி வாங்கிக் கொடுத்து அனுப்பிவிட்டார். பின்னர் போலீஸ்காரர்களுக்கு டிமிக்கிக் கொடுத்துவிட்டு தானும் தப்பிச் சென்றுவிட்டார் எட்டிஜெயமனே.

வருமான வரி அதிகாரிகள் மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்கலாமென்று யோசித்து வருகின்றனர்.

## 'பாண்டித்தேவன்' முடிவடைகிறது!

டைரக்டர் கே. சுப்பிரமண்யத்தின் தயாரிப்பில் வளர்ந்துவரும் மொராக் அண்டுஸ்ரீனிவாஸ் பிலிம்ஸாரின் 'பாண்டித்தேவன்' படப்பிடிப்பு வேலைகளெல்லாம் முடிவடையும் தருவாயை நெருங்கியுள்ளன. இதற்கான இறுதி வேலைகள் நெப்டியூன் ஸ்டுடியோவில் நடைபெற்று வருகிறது. இந்தப் படம் வெகு விரைவிலேயே திரைக்கு வருமென்று எதிர்பார்க்கப்படுகிறது

டி. கே. பாலச்சந்தின், ராஜசுலோசனா, பி. எஸ். சரோஜா, ராகினி, சந்திரபாபு, அசோகன், சகஸ்ரநாமம், எம். ஜி. சக்கரபாணி, என். எஸ். கே. மதுரம், டி. கே. பகவதி, டி. பி. முத்துலட்சுமி, பி. எஸ். ஞானம் முதலியவர்கள் இதில் நடித்துள்ளனர். பலவகையான முற்போக்கு கருத்துக்களைக்கொண்ட இந்தப் படத்திற்கான திரைக்கதை வசனங்களை முகவை இராஜமாணிக்கம் எழுதியுள்ளார்.

## திரை உலகம்

பட விமர்சனம்

## நீலாவுக்கு நெறஞ்ச மனசு

தயாரிப்பு : ராயல் பிலிம்ஸ். டைரக்ஷன் : கே. சோமு.

கதை என்பது பேருக்குத்தான். கருத்தும் அப்படியே. ஆரம்பத்திலிருந்து கடைசிவரை ஒரே ஹாஸ்யம். இதுவே 'நீலாவுக்கு நெறஞ்ச மனசு'.

முதலாளி (வீரப்பா) ஒரு ரௌடி. அவரது மானேஜர் (டி. கே. ராமசாமி) நல்ல மனிதர். அவருக்கு நான்கு பெண்கள் மனைவி இறந்துவிட்டாள். பெண்களில் மூத்த பெண் நீலா (பண்டரி பாய்) இவள் குடும்பத்திற்கு தாய்போன்று இருக்கிறாள். அதனால்தான் இவளுடைய தந்தையும் மற்றவர்களும் "நீலாவுக்கு நெறஞ்ச மனசு என்று அடிக்கடி அவளிடமே கூறுகிறார்கள்." (கேட்பதற்குப் புளித்துப் போகிறது).

ரவுடி முதலாளி சதிசெய்து மானேஜரின் மூன்றாவது பெண்ணைக் கெடுக்கப் பார்க்கிறான்.

நான்கு பெண்களுக்கு நான்கு மாப்பிள்ளைகளும் ஏற்பாடாகிறது. முடிவில் வேலையிலிருந்து நீங்கிய மானேஜர் தனக்கு வரப்போகும் ஒரு மாப்பிள்ளை பாட்டி வட்டிக்கு விட்டு கொள்ளை கொள்ளையாக சம்பாதித்து வைத்த பணத்தைக் கொண்டு நான்கு பெண்களுக்கும் கல்யாணம் செய்து வைக்கிறார். இதுதான் கதை.

வேலைதேடிக் கொண்டு மானேஜரின்பெண்கள் இருவரிடம் 2 பேர் வருகிறார்கள். இருவரில் ஒருவர் ஸ்ரீராம். தன்மானமுள்ளவராகப் பேசுகிறார். பலமுள்ளவர். ஆனால் நடைமுறையில் படத்தில் அவர் தன்மானமுடன் உழைப்பவராக இல்லாமல் சோம்பேரியாகச் சுற்றுகிறார். பண்டரி பாயிடம் சென்று வேலை கேட்கிறார். டி. கே. ராமச்சந்திரன் மானமுடன் வாழும் வாத்தியார் வேலை பார்க்கும் மானேஜரின் மற்றொரு பெண் எம். என். ராஜத்திடம் சென்று வேலை கேட்கிறார் அப்பாவிடம் சொல்லி வாங்கித் தருவதாக இருவரும் சொல்கிறார்கள்.

கடைசியில் இருவருக்கும் அப்பாவிடம் சொல்லி வேலை வாங்கித் தரவில்லை. ஆனால் முடிவில் அவர்களுக்கு வட்டி வாங்கிப் பணக்காரியான பாட்டியின் பணத்தில் கல்யாணம் முடித்து வைக்கிறார்.

கதையில் கற்பனைக் கோர்வையுமில்லை, கதாபாத்திரங்களில் வளர்ச்சியுமில்லை. ஆனால் ஏ. பி. நாகராஜனின் வசனத்தினாலும் சம்பவங்களின் பின்னல்களின் ஹாஸ்யத்தினாலும் விறுவிறுப்பாக உள்ளது.

நடிப்பில் வி. கே. ராமசாமி நம் மனதைக் கவர்கிறார்.

எம். என். ராஜம் நடிப்பு நன்றாயிருக்கிறது.

கிரிக்கெட் ஆடும் தங்கவேல்—முத்துலட்சுமி ஹாஸ்யம் நன்றாக இருக்கிறது. டி. ஆர். ராமச்சந்திரன் நடிக்கும் கலைப்பித்துப் பிடித்த முட்டாள் பிள்ளை நடிப்பு சகிக்கமுடியவில்லை. பண்டரி பாயின் நடிப்பு வழக்கம்போல்—ஆனால் அழகை மட்டும் இல்லை.

ஹாஸ்யத்திற்காக ஒரு தடவை பார்க்கலாம்.

—சக்தி

## தீபாவளிக்கு அதிசயத் திருடன்

ஸாஹினி புரொடக்ஷன்ஸார் தயாரித்துவரும் 'அதிசயத் திருடன்' முடிவடையுந் தருவாயிலிருக்கிறது. தீபாவளி தினத்தன்று இப்படத்தை வெளியிட தீவிர முயற்சி செய்துவருகின்றனர். இதில் திருடனாக நடிப்பவர் ஜெமினி கணேசன். அவனைத் திருத்தி அவன் மனதைக் கொள்ளை கொள்ளும் பூக்காரி பாகத்தில் சாவித்திரி நடிக்கிறார். இன்னும் தங்கவேலு, பாலையா, நாகையா முதலியவர்களும் நடிக்கின்றனர். இந்தப் படத்தை பி. புல்லையா டைரக்ட் செய்துவருகிறார். வாஹினி, விஜயா ஸ்டுடியோக்களில் இதன் படப்பிடிப்பு நடைபெற்று வருகிறது. இதன் திரைக்கதை வசனங்களை நாகர்கோவில் பத்மநாபன் எழுதியுள்ளார்.

## எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள்

ஜூபிடர்பிக்சர்ஸார் தயாரித்து வரும் படங்களில் 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள்' படமும் ஒன்று. இதில் ஜெமினிகணேசன்—ராகினி ஜோடி நடித்துவருகின்றனர். மற்றும் பிரேம்நஸீர், எம் என். ராஜம், நாகேந்திரராவ், டி. கே. பகவதி, டி. கே. ராமச்சந்திரன், வி. ஆர். ராஜகோபால், கருணாநிதி, முத்துலட்சுமி முதலியவர்களும் நடித்து வருகின்றனர். இதை பிரகாஷ் ராவ் டைரக்ட் செய்கிறார். ஸ்டுடியோ நெப்டியூன்.

## நல்ல தீர்ப்பு

ஸ்ரீ புரொடக்ஷன்ஸார் இதுவரை பெயரிடாமல் தயாரித்து வந்த படத்திற்கு 'நல்ல தீர்ப்பு' என்று பெயரிட்டுள்ளனர். இதில் ஜெமினிகணேசன்—ஜமுனா ஜோடி நடித்துவருகின்றனர். எம். என். ராஜம், கண்ணாம்பா, எம். சரோஜா, சக்கரபாணி, சகஸ்ரநாமம், டி. ஆர். ராமச்சந்திரன், துரைராஜ் ஆகியோர்களும் இதில் நடித்து வருகின்றனர். படம் முக்கால் பாகம் தயாராகிவிட்டதாகத் தெரிகிறது. ராகினி, சாயி—சுப்புலட்சுமி நடனங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதன் கதையை முரசொலி மாறன் எழுதியுள்ளார். சங்கீதம் எஸ். எம். சுப்பையா நாயுடு. டைரக்ஷன் டி. பிரகாஷ்ராவ். ஸ்டுடியோ வாஹினி.

## திரௌபதி நாடக மன்றத்தின் 'கவிதா ராஜ்யம்'

சரித்திரப் பின்னணியுடன் கூடிய உயர்தர நகைச்சுவை நாடகமான 'கவிதா ராஜ்யம்' ஆரம்ப விழா சென்ற மாதம் நடைபெற்றது. புகழ்பெற்ற எழுத்தாளர் வேலவன் எழுதிய இந்நாடகம், எம் எஸ். திரௌபதி நாடக மன்றத்தாரால் விரைவில் அரங்கேற்றப்படும். டி.என். கருணாகரன் முக்கிய பாகத்தில் நடிப்பார். நாடக நிர்வாகம், டைரக்ஷன், ஆகியவற்றை பி. எஸ். சிவானந்தம் கவனித்து வருகிறார். இசையமைப்பு, பாடல்கள் எம். கே. ஆத்மநாதன்.

∴ ஆரம்ப விழாவிற்கு 'அவ்வை' டி. கே. ஷண்முகம், டி. கே. பகவதி முதலிய கலைஞர்கள் வந்திருந்தனர்.



ஸாஹினியின் 'அதிசயத் திருடன்' படத்தில் பாலையாவும், சாவித்திரியும்.

## படப்பிடிப்பின் மத்தியில்..

"ஒளி"

விஜயா ஸ்டுடியோ படப்பிடிப்பு அரங்கங்களிலொன்றில் ஸாஹினி பிக்சர்ஸாரின் 'அதிசயத் திருடன்' படப்பிடிப்பு நடந்துகொண்டிருந்தது. அரங்கத்தில் காட்சி மாற்றத்திற்கான வேலைகள் நடந்துகொண்டிருந்ததால் நடிகர்களெல்லாம் வெளி தாழ்வாரத்தில் அமர்ந்திருந்தனர்.

### அட பாவிகளா!

"அட பாவிகளா! நீங்க நாசமாப் போக!!" என்று கத்தினார் தங்கவேலு.

திரும்பிப் பார்த்தேன், அவர் கையில் ஜனசக்தி பத்திரிகை இருந்தது. முத்துலட்சுமி அவர் அருகில் வந்து "என்னுங்க?" என்றார்.

"இதோ பாத்தியா, கோயமுத்தூர் அருகில் குடிசைகள் போட்டு பனந் தோப்பில் வாழ்ந்து வந்த சங்கனூர் மக்களையெல்லாம் விரட்டி விட்டு, அவங்க குடிசைகளையெல்லாம் பிச்சு எறிஞ்சுட்டாங்களாம்! அநியாயக்காரங்க இவங்க உருப்படுவானுங்களா?" என்றார், பத்திரிகையில் நான்காம் பக்கத்திலிருந்த இரண்டு படங்களைச் சுட்டிக் காட்டிக் கொண்டே.

"த்சொ! த்சொ!!" என்று கொட்டிக் கொண்டே "பாவம் எதுக்காக இப்படி பண்ணுறாங்க?" என்றார் முத்துலட்சுமி.

"இவங்களுக்கு வேற வேலை என்னவாம்! ஏழைகளை வாழ விடலாமா? அதுக்காகத்தான்" என்றார் தங்கவேலு.

### போராட்டத்தில் கலந்துகொள்ளுங்கள்

"கச்சா பிலிம் வெட்டை எதிர்த்து நடக்கவிருக்கும் போராட்டத்தில் நீங்களெல்லாம் கலந்துகொள்ளப் போகிறீர்களா?" என்று கேட்டேன் ஜெமினி கணேசனைப் பார்த்து.

'இன்னும் அதுபற்றி தீர்மானிக்கவில்லை' என்றார் அவர்.

(அப்போது போராட்டத்தில் நடிகர்கள் கலந்துகொள்ளுவதாகத் தீர்மானிக்கவில்லை.)

"நடிகர்களுக்கு தமிழ்நாட்டு மக்களிடையே நல்லதொரு செல்வாக்கு வளர்ந்துள்ளதே. இதை ஏன் நீங்கள் பயன்படுத்தக் கூடாது?" என்றேன்.

"அது சர்க்காருக்குத் தெரியவில்லையே!" என்றார் கணேசன்.

"அதை எப்படித் தெரியவைப்பது? மற்றவர்களுடன் நீங்களும் (நடிகர்களும்) சேர்ந்து போராட்டத்தில் பங்கு கொள்வதுதான் அதற்கு வழி. படத்தொழிலில் மற்ற எல்லோரையும்விட மக்கள் மதிப்பைப் பெற்றவர்கள் நடிகர்கள்தான். அவர்கள் கலந்துகொள்ளும் காரியங்களுக்கு மக்களுடைய ஆதரவும் ஏராளமாகக் கிடைக்கும். அதன்மூலம் டில்லுப்பிள்ளையாரான சர்க்காரையும் அசைந்து கொடுக்கச் செய்ய முடியுமே!" என்றேன்.

"மற்றவர்கள் முடிவையும் பார்த்துத்தான் செய்யவேண்டும். போராட்டத்தில் கலக்கப் பிரியம்தான், முயற்சிக்கிறேன்" என்றார் கணேசன்.

### தங்கவேலுவின் பயம்!

"ஏய் தம்பி, லெட்டுலே சிகரெட் டப்பா இருக்கு. பாலையா அண்ணனுக்குத் தெரியாமே கொண்டா பார்க்கலாம்" என்றார் தங்கவேலு.

பையன் சிகரெட் டப்பாவைக் கொண்டு வந்தான். ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துவிட்டு எல்லோருக்கும் ஒவ்வொன்று கொடுத்தார். "இவரு சாப்பிடமாட்டாரு, இவருக்கு வேண்டாம்" என்றார் கணேசன் என்னைச் சுட்டிக் காட்டி.

தங்கவேலு வாயிலிருந்து புகை வருவதற்கும், பாலையா செட்டுக்குள்ளிருந்து வெளியே வருவதற்கும் சரியாக இருந்தது. உடனே நாற்காலியை விட்டு துள்ளி எழுந்து, சிகரெட்டை மெதுவாகக் காலுக்குள் அமுக்கி மறைத்துவிட்டு, பின்புறமாகத் திரும்பி புகையை விட்டுவிட்டு பயத்தோடு பாலையாவைப் பார்த்தார். நல்லவேளையாக பாலையா இதைக் கவனிக்காமல் போய் விட்டார். ஆயினும் தங்கவேலுக்குப் பயம் தெளியவில்லை.

பாவம் அவர் முகத்தை அப்போது பார்க்க வேண்டுமே!

"இப்போ ஒரு பெரிய கண்ணாடி இருந்தா உங்கமுகம் போன லட்சணத்தை அதில் பார்த்திருக்கலாம்" என்றார் முத்துலட்சுமி.

"சமயம் தெரியாத மனுஷன்!" என்று முணுமுணுத்துக் கொண்டே உட்கார்ந்தார் தங்கவேலு. அதற்குள் செட் தயாராகி விட்டதால் எல்லோரும் எழுந்து படப்பிடிப்பிற்குச் சென்றார்கள்.

# கச்சாபிலிம் வெட்டை எதிர்த்து 7உ கிளர்ச்சி

## சினிமா நடிகர்களும் சேர்ந்தனர்

## கடற்கரை பொதுக்கூட்டத்தில் சிவாஜி, ஜெமினி, எம். ஜி. ஆர். பேசுவார்கள்!

### சினிமாப் பத்திரிகையாளர்களும் கலந்துகொள்வார்கள்

கச்சா பிலிம் இறக்குமதி வெட்டின் காரணமாக தென்னிந்திய சினிமாத் தொழில் பாதிக்கப்பட்டு, பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களின் வேலைகளுக்கும் ஆபத்து ஏற்படும் பயங்கரமான நிலைமை உருவாகி வருவதால், படத் தொழில் பாதிக்காமல் பாதுகாக்க, போதுமான கச்சா பிலிம்களை இறக்குமதி செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்வதற்காகவும், நிலைமைகளை பொது மக்களுக்கு உணர்த்துவதற்காகவும் இம்மாதம் 7-ந் தேதியன்று பிரம்மாண்டமான கண்டன ஊர்வலமொன்று நடத்தி கிளர்ச்சி செய்யப் போகின்றனர்.

இந்தக் கிளர்ச்சியில் சினிமா நடிகர்கள், துணை நடிகர்கள், சினிமா ஊழியர்கள், சினிமா விசிறிகள், பிலிம் வர்த்தகர்கள், சினிமா டெக்னிஷியன்கள், பிலிம் சொஸைட்டியினர், சினிமா பத்திரிகையாளர்கள் மற்றும் பலரும் கலந்துகொள்வார்கள்.

ஊர்வலம் 7-ந் தேதியன்று மாலை 3 மணியளவில் மவுண்டு ரோடு ரேவதி ஸ்டுடியோவிலிருந்து (தேனாம்பேட்டை காங்கிரஸ் பில்டிங் அருகில்) புறப்பட்டு மவுண்டு ரோடு, வாலாஜா ரோடு, பைகிராப்ட்ஸ் ரோடு வழியாகச் சென்று மெரினா கடற்கரையை அடையும்.

அங்கு டைரக்டர் கே. சுப்பிரமண்யம் தலைமையில் சிவாஜி கணேசன், ஜெமினிகணேசன் எம். ஜி. ராமச்சந்திரன், எஸ். எஸ். ராஜேந்திரன், பிரேம்நஸீர், ராஜசுலோசனா மற்றும் படத்தொழிலில் ஈடுபட்டுள்ள பலரும் பேசுவார்கள். இந்த மாபெரும் பொதுக் கூட்டம் மாலை 5-30 மணியளவில் நடைபெறும்

எம்.ஏ.வி. பிக்சர்ஸாரின் 'மாதவி' படத்தில் மனோகரும், சௌகார் ஜானகியும்

# நாடெங்கும் காந்தி ஜயந்தி

## விமரிசையாகக் கொண்டாட்டம்

## உ. பி.யில் 3 ஆயிரம் கைதிகள் விடுதலை

சென்னை, அக். 2—

இன்று சென்னை நகரில் பலவிடங்களில் காந்தி ஜெயந்தி விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. காங்கிரஸ் கமிட்டிகள், மன்றங்கள், பொது ஸ்தாபனங்கள் கொண்டாட்டம் நடத்தின. பல இடங்களில் தேசியக் கொடி ஏற்றுவிக்கப்பட்டது. பல பள்ளிக்கூடங்களில் மாணவர்பாட்டு, கும்மி, கோலாட்டம் முதலிய நிகழ்ச்சிகள் நடத்தினார்கள். நூல் நூற்பு யக்ஞம் பலவிடங்களில் நடத்தப்பட்டது.

### சிம்லா

இங்குள்ள காந்தி சிலைக்கு அரசியல் கட்சிகள், சமூக ஸ்தாபனங்கள் சார்பில் மலர்மாலைகள் சூட்டப்பட்டன. பஞ்சாப் கவர்னர் என். வி. காட்கில் பேசினார். காந்தியைப் பின்பற்றினால் சர்வதேச நெருக்கடிக்குப் பரிகாரம் காணலாம் என்றார்.

### கல்கத்தா

மேற்கு வங்கம் முழுவதிலும் காந்தி ஜெயந்தி விழா கொண்டாடப்பட்டது. கல்கத்தாவில் காந்தி கட்டத்தில் நிறுவப்பெற்றுள்ள காந்தி நினைவு ஸ்தம்பத்தில் மலர் வடங்கள் சார்த்தப்பட்டன. காந்திஜியின் லட்சியங்களைப் பின்பற்ற வேண்டும் என்று மந்திரி காளிபாத முகர்ஜீ வேண்டினார்.

### டெல்லியில்

இங்கு ராஜகட்டத்தில் உள்ள காந்தி சமாதியில் பிரார்த்தனை நடைபெற்றது. உதவி ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், பண்டித பந்த், மொரார்ஜி தேசாய் முதலிய மத்திய அமைச்சர்கள் கலந்து கொண்டார்கள். கீதை, குரான், பைபிள் ஆகிய நூல்களிலிருந்து விசேஷ பகுதிகள் பாராயணம் செய்யப்பட்டன.

திரளான மக்கள் வந்து சமாதியில் மலர்வடம் சார்த்தி மறைந்த தேசபிதாவுக்கு அஞ்சலி செலுத்தினர்.

### பம்பாய்

அகோலாவிலிருந்து 12 மைல் தொலைவிலுள்ள காந்தி கிராமத்தில் காந்தி சிலையை பம்பாய் முதலமைச்சர் வி. பி. சாவன் திறந்து வைத்தார். பத்தாண்டுகளுக்கு முன் காந்திஜியின் அஸ்தி கரைக்கப்பட்ட பூர்ணா நதிக் கரையில் இந்தச் சிலை நிறுவப்பட்டுள்ளது.

### கோவை

ராம் ராம் பஜனை, காந்தி வரலாறு பற்றிய வில்லுப்பாட்டுகள் இவற்றுடன் காந்திஜெயந்தி கொண்டாடப்பட்டது. ஏழைகளுக்குக் கஞ்சி வார்க்கப்பட்டது. கதர் பொருட்காட்சியை நேற்று நிதியமைச்சர் சுப்ரமண்யம் திறந்து வைத்தார். கிராமியக் கைத்தொழில்களை ஆதரிக்க வேண்டும் என்று அவர் கோரினார்.

### பங்களூர்

காந்தி சிலை முன் நூல் நூற்பு யக்ஞம் நடைபெற்றது. சுதேசி கடை ஒன்று திறக்கப்பட்டது. காதி இயக்கத்தின் முக்கியத்துவம் பற்றி வி. எல். மேத்தா பேசினார்.

### மதுரை

காந்தி ஜெயந்தியை ஒட்டி இன்று காலையிலும் மாலையிலும் ஊர்வலங்கள் நடைபெற்றன. மாலையில் யானைகள் முன்னே செல்ல பூப்பல்லக்கில் காந்தி உருவச்சிலை ஊர்வலமாகக் கொண்டு செல்லப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட சாதனைகளை விளக்கும் படங்கள் மாட்டு வண்டியில் பின் சென்றன.

### பாட்னா

காந்தி ஜெயந்தியை முன்னிட்டு இரண்டாயிரம் மண்டலக் காங்கிரஸ் கமிட்டிகளைச் சேர்ந்தவர்கள் பாத யாத்திரையாகச் சென்று காந்திஜியின் கோட்பாடுகளைப் பிரச்சாரம் செய்தனர். நூற்றுக்கணக்கான பேர் கலந்துகொண்ட நூற்பு யக்ஞம் நடைபெற்றது.

### லட்சுமணபுரி

லட்சுமணபுரியில் முதலமைச்சர் சம்பூர்ணானந்த் தலைமையில் காந்தி ஜெயந்தி நடைபெற்றது. மேல்சபைக் கட்டிடத்தில் காந்திப் படத்தை கவர்னர் வி.வி. கிரி திறந்துவைத்தார். காந்தி ஜெயந்தியை ஒட்டி 3000 கைதிகளுக்கு பொதுமன்னிப்பு அளிக்கப்பட்டது.

# சேலம் முனிசிபல் காங். உறுப்பினர் ராஜினாமா

## காங்கிரஸ் சேர்மன் மீது குற்றச்சாட்டு

சேலம், செப். 17—

சேலம் நகர சபையின் 18-வது வார்டு உறுப்பினர் ஏ. கனகராஜன் தமது பதவியை ராஜினாமா செய்து முனிசிபல் காங்கிரஸ் கட்சித் தலைவர், தமிழ்நாடு காங்கிரஸ் கட்சித் தலைவர் ஆகியோருக்குக் கடிதங்கள் எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

அவர் தமது ராஜினாமாவுக்குக் கீழ்க்கண்ட காரணங்களைக் கூறியிருப்பதாகத் தெரிகிறது.

### ஊழல்கள் அதிகரிப்பு

சேலம் நகரசபையின் நிர்வாக ஊழல்கள் அதிகரித்தவண்ணமுள்ளன. சேலம் முனிசிபல் காலேஜ் கவர்னிங்பாடியின் இரு ஸ்தானங்கள் காலியாகி பல மாதங்களாகியும் பூர்த்தி செய்யப்படவில்லை. சேலம் முனிசிபல் காலேஜை விஸ்தரிக்கவும், அபிவிருத்தி செய்யவும் சர்க்காரிடம் ஒப்படைக்க வேண்டுமென கல்வி அமைச்சர் சி. சுப்பிரமணியம் கோரியும் சர்க்காரிடமிருந்து கடிதம் வந்து இரண்டு மாத காலமாகியும் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

### கூட்டம் முறையாக நடப்பதில்லை

நகர சபைக் கூட்டங்கள் முறையாக நடப்பதில்லை. நகர சபைத் தலைவர் தினசரி காரியாலயம் வந்து பிரச்னைகளை தீர்ப்பதில்லை. 15-8-58-ம் தேதியுடன் நகர சபைக்கு சம்பந்தப்பட்ட சேலம் விக்டோரியா டாக்கீஸ் நிலத்தின் குத்தகை முடிவாகியும், கமிஷனர் அதற்கான தஸ்தாவேஜுகளை தயார் செய்து அனுப்பியும் தலைவர் அந்த விஷயத்தை நகர சபைக் கூட்டத்திற்கு நாளது வரை கொண்டுவரவில்லை.

நகரின் முக்கியப்பிரச்சினைகளை தீர்க்க நகரசபை முறையாக நடவடிக்கை எடுத்து மக்களின் நல உரிமைகளை பாதுகாக்கத் தவறி வருவதால் மக்களிடம் அதிருப்தி வளர்ந்து வருகிறது. எனவே நகர மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யாத நகர சபையில் இருந்து உறுப்பினரின் கடமைகளை நிறைவேற்ற இயலவில்லை.

(ந. நி.)

# ஜப்பானிய தொழிலாளர் தீரம்

## பார்மோசாவுக்கு ஆயுதமேற்ற மறுப்பு

லண்டன், அக். 2—
...மாய் தீவு போராட்டத்தில், ...ங்கே-ஷேக்கிற்காக, ஜப்பா...ல் ஹிரோஷிமா பகுதியில் ...ர நகரிலிருந்து அமெரிக்கர்கள் ...தங்கள் அனுப்ப முன் வந்த ... தங்கள் தலையில் அணுகுண்...ளைப் போட்டவர்கள் இந்த ...மெரிக்கர்கள் தான் என்ற ...றுப்பினாலும், பார்மோசா ...டையில் ஜப்பானைப் பயன் ...த்துவதை இந்த துறைமுகத் ...ாழிலாளர்கள் விரும்பாததினா...ம், இந்த ஆயுதங்களை ஏற்று... செய்ய மாட்டோமென்று ...00 பேர் வேலை நிறுத்தம் ...ய்துவிட்டார்கள்.

## அமெரிக்காவில் ½ லட்சம் மோட்டார் தொழிலாளர் வேலை நிறுத்தம்

டெட்ராய்ட், அக். 2—
அமெரிக்காவிலே மிகப் பெரிய ...ர் உற்பத்தி நிலையமான ஜென...ல் மோட்டார்ஸ் கார்ப்பொரே...ஷனைச் சேர்ந்த தொழிலாளர்கள் 50,000 பேர் அமெரிக்காவெங்...ம் பரவியிருக்கும் தம் தம் ...தாழில் நிலையங்களிலிருந்து ...வலை நிறுத்தம் தொடங்கியுள்ள...ர். இந்த வேலைநிறுத்தம் அதி...ார பூர்வமானதாகும்.

யுனைடெட் ஆட்டோமொபைல் ...ர்க்கர்ஸ் யூனியனும், கார்ப்பொ...ரேஷன் பிரதிநிதிகளும் புதிய ...தாரு தொழில் ஒப்பந்தத்தின் ...து உடன்பாட்டுக்கு வரமுடி...யாததாலேயே இவ்வேலைநிறுத்...தம் ஆரம்பிக்கப்பட்டது. சரியாக ...ற்பகல் பத்து மணிக்கு ஆரம்ப...மான (இந்திய கடிகாரப்படி பிற்...பகல் 8-30 மணி) இவ்வேலை ...நிறுத்தம் அமெரிக்காவெங்கும் ...பெரும் பரபரப்பை ஏற்படுத்தி...யுள்ளது.

## சியாங்கிற்கு டல்லஸின் செய்தி

### அமெரிக்க தூதர் நேரில் கொடுத்தார்

தைபே, அக். 3—
சியாங்கே ஷேக்கிற்கு அமெரிக்க வெளிநாட்டு மந்திரி டல்லஸ் ஒரு செய்தி அனுப்பினார் அச்செய்தியை அமெரிக்க தூதர் டிரம்ரயிட் நேரில் கொடுத்தார். பார்மோசா விவகாரத்தில் அமெரிக்காவின் நிலைமைபற்றி சியாங்கும் தூதரும் விவாதித்ததாகக் கூறப்பட்டது.

அமெரிக்க நிலை முன்போல் தான் இருக்கிறது. மாறவில்லை யென்று தெரிகிறது.

### நீர் மட்டம்

சென்னை, அக். 3—

| | |
|---|---|
| மேட்டூர் | 116·15 அடி |
| பாபநாசம் | 96·60 அடி |
| பெரியாறு | 36 40 அடி |

## மார்க்கெட் நிலவரம்

சென்னை அக் 4—

| | |
|---|---|
| சவரன் | ரூ 72-8-0 |
| தங்கம் (ரெடி) | ரூ. 109-0-0 |
| மூசை தங்கம் | ரூ. 107-0-0 |
| வெள்ளி 100 தோலா எடை | 189-8-0 |
| வெள்ள 1 ரூ. எடை | 1-15-0 |

**மணிலா பயறு**

| | |
|---|---|
| 531 ராத்தல் கொண்ட பாரம் (விற்பனைவரி உட்பட) கோடை சரக்கு | ரூ. 192.00 |

**மணிலா எண்ணெய்**

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி 3%FFA (மொத்த விலை) | |
| ரெடி | 355-00 |
| அக்டோபர் | 348-00 |
| நவம்பர் | 322.00 |

**விளக்கெண்ணெய்**

| | |
|---|---|
| (500 ரா. பாரம் 1-க்கு) மதராஸ் கிடங்கு டெலிவரி திருப்பத்தூர் | 330-00 |
| சேலம் "தாமரை அன்னம்" | 26-50 |

**தேங்காய் எண்ணெய்**

| | |
|---|---|
| (37½ ரா. டின் 1க்கு) | |
| எம். எஸ். மார்க்கு | 41-00 |
| அம்பு மார்க் | 40-00 |
| ராஜா | 40-00 |

**சர்க்கரை**

| | |
|---|---|
| 2 அந்தர் மூட்டை 1க்கு ரெட் விலைகள் | |
| உய்யூரு | 105-81 |
| டனக்கு | 106.06 |



## உலக அபிப்ராயத்தை லக்ஷியம் செய்யப் போவதில்லை

### தெ. ஆ. பிரதமரின் நிறத்திமிர்

பிரிடோரியா, அக். 2—
தென் ஆப்ரிக்காவில் கருப்பு நிறத்தவரைத் தனி இடங்களில் ஒதுக்கி வைக்கும் திட்டத்தை தேசிய கட்சி நிறைவேற்றியே தீரும் என்று பிரதமர் வெர் வோர்டு அறிவித்தார். இவ்விஷயத்தில் உலக அபிப்பிராயத்தை லக்ஷியம் செய்யப் போவதில்லை என்றும் தெளிவுபடுத்தினார்.

தென்னாப்ரிக்காவில் வெள்ளையரைக் கடவுளே குடியேற்றியிருப்பதாகவும் பிரதமர் கூறினார்.

## சோவியத் குறிப்பு நிராகரிக்கப்படும்

வாஷிங்டன், அக். 3—
ஜெனிவாவில் நடைபெறவிருக்கும் ஆயுதக் குறைப்பு பேச்சு வார்த்தைகள் ஸ்தானிகர் மட்டத்திலிருந்து வெளி விவகார அமைச்சர் மட்டத்திற்கு நடத்தப்படவேண்டும் என்ற சோவியத் குறிப்பை அமெரிக்கா நிராகரித்துவிடும் என்று கூறப்படுகிறது. இதுபற்றி அதிகாரிகளைத் துருவித் துருவிக் கேட்டபோது நிச்சயம் கூறாமல் பிரிட்டனுடன் கலந்துகொண்டு முடிவெடுப்பதாகக் கூறுகின்றனர்.

## கேரளத்திற்கு நார்வே பிரதமர் வருவார்

கொல்லம், அக். 3—
அடுத்த மாதம் இந்தியாவுக்கு விஜயம் செய்கிற நார்வே பிரதமரும் அயல்நாட்டு மந்திரியும் கேரளத்திற்கு வந்து நீண்டாகாராவில் நடக்கும் இந்திய நார்வே அபிவிருத்தி திட்டத்தைப் பார்வையிடுவர். அங்கே ஒரு நாள் தங்குவார்களென்று தெரிகிறது.

# காளீஸ்வரா மில் சத்தியாக்கிரஹம்

## இன்று 13-வது நாள்

### 112 பெண்கள் உட்பட 443 பேர் கைது

கோவை, அக். 3—
கோவை கலெக்டர் அலுவலகத்தின்முன்பு காளீஸ்வரா மில் தொழிலாளர்கள் நடத்திவரும் சத்தியாக்ரஹப் போராட்டத்தின் பதின்மூன்றும் நாளான இன்று இரண்டு பெண்கள் உட்பட பத்துத் தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டனர்.

சென்ற ஆகஸ்ட் 13ல் மூடப்பட்ட இந்த மில்லை ஏற்றுநடத்துமாறு சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளும் கோரிக்கையை ஆதரித்து நடைபெறுவது இந்தப் போராட்டம் என்பது தெரிந்ததே.

112 பெண்கள் உட்பட 443 தொழிலாளர்கள் இதுவரை இப் போராட்டத்தில் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

டால்மியா விவகாரங்கள்பற்றி

## பகிரங்க விசாரணை

### நீதிபதியின் உத்திரவு

புதுடெல்லி, அக். 3—
டால்மியா — ஜெயின் கம்பெனிகள் சம்பந்தமான ஒன்பது விவகாரங்கள் பற்றி விசாரிக்க அமைக்கப்பட்டுள்ள கமிஷனின் தலைவராகிய நீதிபதி விவியன் போஸ், விவகாரங்களின் சில அம்சங்களைப் பற்றிப் பகிரங்கமாக விசாரிக்க வேண்டுமென உத்தரவிட்டிருக்கிறார்.

டால்மியாக்கள், ஜெயின்கள் வழக்கின் முதல் விசாரணை சென்ற செப். 30-ல் நடைபெற்றது. இந்த விசாரணை முறை பற்றி எதிரிகளின் வக்கீல்கள் கிளப்பிய ஆட்சேபணைகளைக் கமிஷன் கேட்டது. ஆனால் விவாத விவரங்களை வெளியிடவில்லை.

ரகசிய விசாரணைகளும் மறைமுகமான விசாரணைகளும் நீதியின் குறிக்கோளுக்குப் புறம்பானவை எனவும் பகிரங்க விசாரணை பற்றிய ஆட்சேபங்களில் நியாயமில்லை எனவும் நீதிபதி தனது உத்தரவில் குறிப்பிட்டிருக்கிறார்.

கமிஷனின் அடுத்த பகிரங்க விசாரணை அக். 27-ல் பம்பாயில் நடைபெறும். அப்பொழுது டால்மியாவின் வக்கீல், விசாரணைக்குட்படுத்தப்படும் அம்சங்கள் பற்றிய கமிஷனின் கேள்விகளுக்குப் பதிலளிப்பார்.

## இந்திய ஜனதிபதி டாக்டர் பிரசாத்

டோக்கியோ, அக். 3—
இந்திய ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திரபிரசாத் இன்று காலை எவ்வித அலுவல்களையும் மேற்கொள்ளவில்லை. திட்டப்படி, கைத்தொழில் ஸ்தலங்களுக்குச் செல்லவில்லை.

ஜனாதிபதி சற்று களைப்புற்றிருந்ததால் ஓய்வு எடுத்துக் கொண்டார். இன்று மாலையில் ஜப்பானிய நாடகத்தை பார்ப்பார். இரவில் ஜப்பானிய மன்னருக்கும் மஹாராணிக்கும் பட்டத்து இளவரசருக்கும் இந்திய ஜனாதிபதி விருந்து நடத்துகிறார். இவ்விருந்துக்கு ஜப்பானிய பிரதமரும் இதர மந்திரிகளும் அழைக்கப்பட்டிருக்கிறனர்.

## மதுரையில் பிச்சைக்காரர் விடுதி

மதுரை, அக். 3—
செயலிழந்தோர் உள்பட்ட பிச்சைக்காரர்களைப் பாதுகாப்பதற்கான பிச்சை வீடுதி ஒன்று விரைவில் மதுரையில் திறக்கப்படும் என்று தெரிகிறது—கலெக்டர் பாலசுப்ரமண்யம் தலைமையில் நடைபெற்ற நகரப் பிரமுகர்கள் கூட்டம் மேற்கண்டவாறு முடிவு எடுத்துள்ளது.

## சைப்ரஸ் மாணவர் ஆர்ப்பாட்டம்

### பிரிட்டிஷ் திட்டத்திற்கு எதிர்ப்பு

நிகோஸியா, அக். 3—
பிரிட்டிஷ் திட்டத்தைஎதிர்த்து சைப்ரஸ் கிரேக்க மாணவர்கள் பெரும் ஆர்ப்பாட்டம் நடத்தினர். இன்று காலை சைப்ரஸ் தீவில் இரண்டாவது பெரிய நகரான லிமாஸனில் நூற்றுக்கணக்கான மாணவர்கள் வகுப்புகளை விட்டு வெளியேறி தெருக்களில் எதிர்ப்பு ஊர்வலமாகச் சென்று பிரிட்டிஷ் திட்டத்தை ஆட்சேபித்தும், ஆர்ச் பிஷப் மகாரியாசை ஆதரித்தும் கோஷங்கள் கிளப்பினர்.

மாணவர்களை போலீசார் தடுத்தனர். புகை குண்டு ஒன்றும் பிரயோகிக்கப்பட்டது. பல மாணவர் கைது செய்யப்பட்டனர். பாடசாலைகளிலும் ராணுவத்தை நிறுத்தினர்.

மார்பூ என்ற மற்றொரு நகரிலும் கிரேக்க மாணவர்கள் வகுப்புகளுக்குச் செல்லாமல் ஆர்பாட்டம் நடத்தினர். பிரிட்டிஷ் ராணுவ லாரி ஒன்றின்மீது கல் வீச்சு நடந்ததாம்.

பிரிட்டிஷ் திட்டத்தை எதிர்க்கும்படி ஆர்ச்பிஷப் மகாரியஸ் ஒரு செய்தி அனுப்பினார்.

சைப்ரஸ் தீவில் பிரிட்டிஷ் அடக்குமுறை மிக மிகக் கடுமையாக இருக்கிறது.

# இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி மத்திய நிர்வாகக்கமிட்டி கூடியது

## தேசியக் கவுன்சில் கூட்டத்திற்கான நிகழ்ச்சி முறைபற்றி முடிவு

சென்னை, அக். 3—
இன்றுமாலை 4-30 மணிக்குக் கூடிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டி மாலை 6-30 உடன் இன்றைய கூட்டத்தை முடித்துக் கொண்டது. பிரதானமாக, நடக்க விருக்கும் தேசியக் கவுன்சில் கூட்டத்திற்கான நிகழ்ச்சி முறைபற்றி முடிவு எடுக்கப்பட்டது.

இன்றையக் கூட்டத்தில் அஜய் கோஷ், பி. டி. ரணதிவே, பி. சி. ஜோஷி, பி. ராமமூர்த்தி, எம். ஆர். வெங்கட்ராமன், பூபேஷ் குப்தா, ரொமேஷ் சந்திரா, ஹரிகிஷன்சிங் சுர்ஜித், என். பிரசாத் ராவ், எஸ். ஜி. சார்தேசாய், பவானிசென், சோகன் சிங் ஜோஷ், ஹரிகிருஷ்ண கோனார், எம். என். கோவிந்தன் நாயர் முதலியோர் கலந்துகொண்டனர். கண்ட்ரோல் கமிஷன் தலைவர் எஸ். வி. காட்டேயும் கலந்து கொண்டார்.

தேசியக் கவுன்சில் கூட்டத்தின் நிகழ்ச்சி முறை பின்வருமாறு என்று தீர்மானிக்கப்பட்டது.

(1) மத்திய கமிட்டியின் கேந்திர வேலைகள் பற்றிய அறிக்கை.

(2) விவசாயக் கொள்கை பற்றிய அறிக்கை.

(3) இரண்டாவது திட்டம் பற்றி அறிக்கை, தீர்மானம்.

(4) கேரள ராஜ்ய நிலைபற்றி அறிக்கை, தீர்மானம்.

(5) உணவு நெருக்கடி பற்றி அறிக்கை—இதில் உ.பி., பீஹார் உணவுப் போராட்டம் பற்றி விளக்கம்.

(6) சர்வதேச நிலை.

தேசியக் கவுன்சில் கூட்டம் அக் 12ந் தேதியுடன் முடிவடைவதாக இருந்தது. ஆனால் பல்வேறு விஷயங்கள் பற்றிச் சர்ச்சை நடத்தவேண்டியிருப்பதால் மேலும் ஒரு நாளைக்கு நீடிக்கப்படும்.

தினசரி காலை 8-30 முதல் 12-30 வரை பிற்பகலில் 4 முதல் 8 வரை தேசியக் கவுன்சில் கூட்டம் நடைபெறும். ஞாயிற்றுக்கிழமையன்று தேசியத் தலைவர்கள் பொதுக்கூட்டங்களில் பேசுவார்கள்.

## சைப்ரஸ்பற்றி ஐ. நா. தீர்வுக்கு

### கிரீஸ் வலியுறுத்தல்

நியூயார்க், அக். 3—
சைப்ரஸ் தீவு சிறுசிறு பகுதிகளாகத் துண்டாடப்படும் பேரபாயம் ஏற்பட்டிருக்கிறது. அதன் சுதந்திரம் ஐ. நா.வின் தீர்மானத்தை நம்பி இருக்கிறது. நிலை நெருக்கடியாக உள்ளது எனவே ஐ. நா. இதுபற்றி விவாதிக்கவேண்டும் என்று கிரீஸ் பிரதிநிதி வலியுறுத்தினார்.

# மின்சாரத் தொழிலாளர் ஊதியம்

## சமரசப் பேச்சுவார்த்தைக் குழுவின் இறுதி சிபார்சு

சென்னை, அக். 3—
பேச்சு வார்த்தைக் குழுவின் தலைவரான திரு ஹரிஹர ஐயர் அவர்களுக்கு 1-10-58 லிருந்து 15-10-58 வரை தனது சிபார்சை தெரிவிக்க காலம் நீடிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இம் மாதம் 7 ஆம் தேதியன்று குழுவின் தலைவர் பேச்சுவார்த்தைக் குழுவின் முன்னால் நகல் சிபார்சை சமர்ப்பிப்பார் என்றும் அதைத் தொழிலாளர் பிரதிநிதிகள் மூவரும் அந்த நகலைப் பரிசீலித்து14-ஆம்தேதியன்றுமீண்டும் பேச்சுவார்த்தைக் குழு கூடி தலைவரும் தொழிலாளர் போர்டு பிரதிநிதிகளும் கையொப்பமிட்டு பிறகு அரசாங்கத்திற்கு அனுப்பப்படும் என்று நம்பப்படுகிறது.

இவ்வாறு அனுப்பப்படும் சிபார்சை அரசாங்கம் பெட்டியில் பூட்டி வைக்காமல் கவனித்து ஆவன செய்யும் என்று மேல் சபையில் மின்சார போர்டின் வரவு செலவு பற்றிய விவாதத்திற்கு பதிலளிக்கையில் மின்சார அமைச்சர் ராமையா அவர்கள் கூறியுள்ளது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

### தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் சம்மேளன செயற்குழுக் கூட்டம்

அக். 7-ம் தேதி சமரசப் பேச்சு வார்த்தைக் குழுவின் முன்னால் தலைவர் திரு. ஹரிஹர ஐயர் நகல் சிபார்சை வைப்பதையொட்டி, தமிழ்நாடு மின்சார சம்மேளன மாநில செயற்குழுக் கூட்டம் 5, ரிச்சித் தெருவில் காலை 9-30 மணிக்கு இம்மாதம் 9-ம் தேதியன்று சென்னையில் கூடவிருப்பதாக சம்மேளன பொதுச் செயலாளர் திரு. எஸ். சி. கிருஷ்ணன் அறிவிக்கிறார்.

## ஆசிய மக்களும் உலக சமாதானமும்

### இந்திய ஜனாதிபதி கருத்து

டோக்கியோ, அக். 3—
இந்திய ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் டெலிவிஷன் நிகழ்ச்சியில் பேட்டி அளிக்கையில் "உலக சமாதானம் நிலைபெறவும் உலக க்ஷேமாபிவிருத்திக்கும் உதவி செய்யக்கூடிய நிலைமையில் ஆசிய மக்கள் இருக்கவில்லை. ஆசிய மக்கள் தங்கள் நாடுகளை அபிவிருத்தி செய்துகொண்டால் அதுவே பெரும் உதவியாக இருக்கும் என்றார்.

அணு ஆயுத சோதனைகள் உடனே நிறுத்தப்பட வேண்டுமென்றும் டாக்டர் பிரசாத் வற்புறுத்தினார்.

## நியூயார்க்கில் காந்தி ஜயந்தி

நியூயார்க், அக். 2—
இங்கு காந்தி ஜயந்தியில் இந்திய பாதுகாப்பு மந்திரி கிருஷ்ண மேனன் பேசினார். உலகின் மாபெரும் ஏகாதிபத்தியத்தை (பிரிட்டனை) இந்தியாவுடன் நட்புறவு ஏற்படுத்திக் கொள்ளும் படிச் செய்தது மகாத்மா காந்தியின் மாபெரும் சாதனையாகுமென்றார். மனிதருக்குள்ளும் தேசங்களிடையேயும் நட்புறவு ஏற்படுத்துவது இன்னும் சாத்தியமே, அவ்விதம் செய்தால்தான் உலகம் பொதுமக்களுக்கு உரியதாகுமென்றார்.

## நாட்டு மக்களின் சேமிப்பு சக்தி

புதுடில்லி, அக். 3—
நமது நாட்டுமக்களின் சேமிப்பு சக்தி எவ்வளவு என்பது பற்றி ஒரு சர்வே நடத்த பொருளாதார ஆராய்ச்சி கவுன்சில் முடிவு செய்திருப்பதாக இதன் பிரதம நிர்வாகி டாக்டர் பி. எஸ். லோகநாதன் நிருபர்களிடம் கூறினார்.

## உ. பி.யிலும் பஞ்சாபிலும் வெள்ளக் கொடுமை

புதுடெல்லி, அக். 3—
கடந்த மூன்று நாட்களிலும் பெய்த கடுமழையால் உ.பி.யைச் சார்ந்த உன்னாவோ ஜில்லாவில் கங்கை கரைபுரண்டு ஓடுகிறது. மீரத் ஜில்லாவில் 95 ஆயிரம் ஏகர் நிலம் வெள்ளத்திலாழ்த்தப்பட்டு லட்சத்து 60 ஆயிரம் மக்கள் பாதிக்கப்பட்டனர். புலந்த ஷார் ஜில்லாவில் 100 கிராமங்கள் வெள்ளத்திலகப்பட்டுள்ளன. ராம்பூர் ஜில்லாவிலும் 100 கிராமங்கள் மொத்தம் 429 கிராமங்கள் பாதிக்கப்பட்டுள்ளன.

பஞ்சாபில் லூதியானு, கர்னால் இவற்றில் வெள்ளத்தால் பல கிராமங்கள் பாதிக்கப்பட்டுள்ளன. சோளம், பருத்தி தானியங்கள் சேதமடைந்துள்ளன.

## ஒரே சீனாதான் இருக்கிறது அது மக்கள் சீன குடியரசே

### இலங்கைப் பிரதமர் கருத்து

கொழும்பு, அக். 3—
ஐ.நா. பொதுச்சபைக் கூட்டத்தில் நேராகக் கலந்துகொள்ள இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா உத்தேசித்திருக்கிறார். மக்கள் சீனாவுக்கு ஐ. நா. வில் பிரதிநிதித்துவ மளிப்பது பற்றி தீர்மானங்கள் எதுவும் வந்தால் இலங்கை முழுமனதுடன் ஆதரிக்கும் என்றார்.

இரண்டு சீனாக்கள் இருப்பதாக இலங்கை அங்கீகரிக்கவில்லை, ஒரே சீனாதான் இருக்கிறது. அது மக்கள் சீனக்குடியரசு என்று அவர் கூறினார். இதை இலங்கை அங்கீகரித்திருக்கிறது. எனவே இதற்கேற்ப நடக்கும் என்றார்.

## சென்னை மேயர் பம்பாய் விஜயம்

பம்பாய், அக். 3—
சென்னை மேயர் ஸ்ரீமதி தாரா செரியன் இன்று விமான மூலம் பம்பாய் வந்துசேர்ந்தார். விமான நிலயத்தில் பம்பாய் மேயர் எஸ். எஸ். மிராஜ்கர் அவரை வரவேற்றார்.

# 220 லோக் சேவக் தொண்டர்கள் உண்ணாவிரதம்

புருலியா, (மே. வங்கம்) அக். 2—
லோக் சேவக் சங்கத்தின் 220 தொண்டர்கள் இன்று காலை உண்ணாவிரதம் ஆரம்பித்தனர். கஷ்டப்படும் மக்களுக்கு நிவாரணமளிக்க சர்க்கார் செய்துள்ள ஏற்பாட்டில் ஊழல்கள் நடப்பதையும் மக்கள் நலத்தில் காங்கிரஸ்காரர்களின் அசிரத்தையையும் அக்கறையின்மையையும் மக்கள் பணவசதியின்றி பட்டினி கிடப்பதைக் கவனித்து ஆவன செய்யாமல் அதிகாரிகள் அசிரத்தையாக இருந்து வருவதையும் ஆட்சேபித்தே 220 பேரும் உண்ணாவிரதமிருக்கின்றனர்.

## 500 தொழிலாளர்கள் பட்டினிபோட

### டெக்ஸ்டூல் கம்பெனியாரின் சதி

கோவை, அக். 3—
மெகானிக் தொழில் வளர்ந்து வரும் இக்காலத்தில், 500-க்கு மேற்பட்ட தொழிலாளர்களை நிறுத்தி, பட்டினிபோட, டெக்ஸ்டூல் நிர்வாகம் திட்டம் தீட்டியுள்ளதாகவும், இதை எதிர்த்து 8-10-58 முதல் தொழிலாளர்கள் போராட்டம் நடத்தப்போவதாகவும், இதற்கு சகல பகுதி மக்களும் ஆதரவு கொடுக்கவேண்டுமென்று 28 9 58ல் கோவை காந்தி மைதானத்தில் நடந்த கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## இலங்கை கலவரத்தில் இறந்தோரின் விவரம்

### இலங்கைப் பிரதமர் தகவல்

கொழும்பு, அக். 3—
அண்மையில் இலங்கையில் நடைபெற்ற சிங்களர் - தமிழர் மோதுதலின்போது கொல்லப்பட்ட 159 பேரில் 12 பேர் "இந்தியத் தமிழர்" என்ற விபரத்தை இன்று இலங்கைப் பாராளுமன்றத்தில் பிரதமர் பண்டாரநாயகா அறிவித்தார்.

இந்தக் கலவரங்களில் 82 இலங்கைத் தமிழர், 57 சிங்களர், 3 இலங்கை மூர்கள், 1 ஐரோப்பியர் ஆகியோர் இறந்தனர். இன்னும் நால்வரின் இனம் தெரியவில்லை.

## நீக்ரோ வெள்ளையர் சேர்ந்து படிக்க என்றும் இடமில்லையாம்

### நிறவெறி கவர்னர் பிடிவாதம்

லிட்டில்ராக், அக். 2—
நீக்ரோ வெள்ளை மாணவர் சேர்ந்து படிக்கும் பள்ளிக்கூடங்கள் இனித் திறக்கப்படமாட்டா என்று நிறவெறியாட்டமாடும் அர்க்கன்ஸாஸ் கவர்னர் கூறினார். பொதுப் பள்ளிகளில் இரு இனத்தவரும் சேர்ந்து படிக்கவேண்டும் என்ற சுப்ரீம் கோர்ட் முடிவை அவர் எதிர்க்கிறார். எனவே, பொதுப்பள்ளிகளை திறக்காமல் தனியார் நிர்வாகத்தில் உள்ள வெள்ளை பள்ளிக்கூடங்களைத் திறந்து நடத்த உத்திரவிட்டுள்ளார்.

## ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஊழியர்கள் ஆர்ப்பாட்டம்

மதுரை, அக். 3—
இந்திய ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஊழியர்கள் இந் நகரிலுள்ள டிவிஷன் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்தனர். இரண்டுமாத சம்பளத்தை வருஷாந்திர போனஸாக பட்டுவாடா செய்யும்படி கோஷம் செய்தனர்.

இந்த மாதம் வெள்ளிக்கிழமைகளிலும் திங்கட்கிழமைகளிலும் இந்த ஆர்ப்பாட்டம் நடக்கும்.

செப்டம்பர் 27ந் தேதி சென்னையிலும் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

## இராக்-யுகோ வர்த்தக உடன்பாடு

பாக்தாத், அக். 3—
இராக்கும் யுகோஸ்லேவியாவும் நேற்றிரவு வர்த்தக உடன்பாடு ஒன்று செய்துகொண்டனர். ஒரு கம்யூனிஸ்ட் தேசமொன்றுடன் இராக் குடியரசு உடன்பாடு கண்டது இதுவே முதன் முறையாகும்.

## யாக்னிக் விடுதலை

ஆமதாபாத், அக். 3—
மகா குஜராத் ஜனதா பரிஷத் தலைவரும் பார்லிமெண்டு உறுப்பினருமான இந்துலால் யாக்னிக் சிறைத் தண்டனை முடிவுற்று எரவாடா மத்தியச் சிறையிலிருந்து விடுதலையானார். அவரோடு வேறு 13 பேர்களும் விடுதலையாகி வெளிவந்தனர். பரிஷத் உபதலைவரும் கம்யூனிஸ்ட் தலைவருமான தினகர் மேத்தாவும் பார்மார் எம். பி. பிரம்மகுமார் பட் எம். எல் ஏ. மூவரும் இன்று விடுதலையாயினர்.

சிறை வாயிலில், சிறை மீண்ட தலைவர்களுக்கு மகத்தான வரவேற்பளிக்கப்பட்டது. நகருக்குள் தலைவர்கள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார்கள்.

# கேரள ஜன்மீகரம் மசோதா அங்கீகார தாமதம்

## வழக்கமான முறையே அனுஷ்டிக்கப்படுகிறதாம்

புதுடெல்லி, அக். 3—
கேரள ராஜ்யத்தில் சிலவகை நிலங்களின் உரிமைகளை ரத்து செய்யும் 'கேரள ஜன்மிகரம் ஒழிப்பு மசோதா'வை ஜனாதிபதி பரிசீலனை செய்வதாகத் தெரிகிறது.

இம்மசோதா கேரள கவர்னரால் ஜனாதிபதியின் அங்கீகாரத்திற்கு அரசியல் சட்டத்தின் 31 ஏ. ஷரத்துப்படி ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கிறது. நிலச் சீர்திருத்த மசோதாக்கள் சம்பந்தமாக இம்முறையே வழக்கமாக அனுஷ்டிக்கப்பட்டுவருகிறது. கேரளகவர்னரால் ஜனாதிபதியின் அங்கீகாரம் பெற ஒதுக்கப்பட்டதில் விசேஷம் எதுவுமில்லை.

மசோதாவின் சில ஷரத்துக்கள் பேரில் மத்திய சர்க்காருக்கும் ராஜ்யங்களுக்குமிடையில் ஓர் அளவு அபிப்பிராயபேதம் உண்டு.

இம்மசோதா சம்பந்தமாக ஜனாதிபதி என்ன நடவடிக்கை எடுப்பாரென்று இன்னும் தெளிவாகவில்லை. ஆனால் கேரள அசெம்பிளியில் வரும் முன்பே இம்மசோதாவின் நகலை திட்டக் கமிஷனும் நிலச்சீர்திருத்தக் கமிட்டியும் பரிசீலனை செய்தது. கோயில் நிலங்கள் சம்பந்தமாக மசோதாவில் திருத்தம் செய்யும்படி மத்திய சர்க்கார் வற்புறுத்தியது. கேரள சர்க்கார் இணங்கவில்லை.

கேரள சட்டசபையில் இம் மசோதா நிறைவேறி ஜனாதிபதிக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. ஜனாதிபதி இம்மசோதாவுக்கு அங்கீகாரம் மறுக்கவோ அல்லது திருத்தங்களைச் சிபார்சு செய்து கேரள சட்டசபைக்கு திருப்பி அனுப்பவோ செய்யலாம்.

## ஜப்பானிலிருந்து ஜனாதிபதி புறப்படுகிறார்

### மன்னருக்கு விருந்து

டோக்கியோ, அக். 3—
ஜப்பானிய மன்னருக்கும், இளவரசருக்கும் இன்று இந்திய ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் விருந்தளித்தார். பின்னர் அரை மணி நேரம் டெலிவிஷன் பேட்டி அளித்தார். ஜனாதிபதி நாளை மாலை புதுடெல்லிக்குப் பயணமாகிறார். (பி. டி. ஐ.)

# டாடாவுடன் பேரம் பேசிய போலீஸ் அதிகாரிமீது நடவடிக்கை

## "போலீஸ் அதிகாரி சட்டத்தை மதிக்கவில்லை" என அரசாங்கமே கூறுகிறது

புவனேஸ்வர், அக் 3—
ரூ. 1,000 கொடுத்தால் டாடா கம்பெனியைச் சேர்ந்த பார்பில் சுரங்கப் பகுதியில் ஒரு விசேஷப் போலீஸ்படை நிறுவுவதாக ஸ்தல சூப்பிரண்டெண்ட் டாடா நிர்வாகத்துக்கு எழுதியிருந்ததைப் பற்றிய செய்தி நேற்று வெளியாகியிருந்தது, இது சம்பந்தமாக உத்கல் கம்யூனிஸ்ட் தலைவருடைய அறிக்கையும் வெளியிடப்பட்டது.

ரூ. 1,000 அளித்தால் பார்பில் சுரங்கப்பகுதியில் போலீஸ் படையொன்றை நிறுத்தி வைப்பதாகப் போலீஸ் சூப்பிரண்டெண்ட் டாடா நிர்வாகத்துக்கு எழுதியதை அரசாங்கம் கண்டித்திருக்கிறது. "சட்டத்தை அவர் மதிக்கவில்லை" என்பதாக அரசாங்கம் குற்றம் சாட்டியிருக்கிறது.

கோயஞ்சார் போலீஸ் சூப்பிரண்டெண்ட், டாடா இரும்பு எஃகு கம்பெனிக்கு எழுதிய கடிதம் அரசாங்கத்தின் கவனத்துக்கு கொண்டு வரப்பட்டதாகவும் அந்தக் கடிதத்திலிருந்து, சம்பந்தப்பட்ட போலீஸ் அதிகாரி போலீஸ் சட்டத்தின் 14-வது விதியை மதிக்கவில்லை என்று அரசாங்கம் கருதுவதாகவும் அரசாங்கத்தின் பத்திரிகைக் குறிப்பு மேலும் கூறுகிறது.

## பிட்ரகுண்டா கிளை தந்தி

பிட்ரகுண்டா, அக். 3—
தட்சிண ரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன், பிட்ரகுண்டா கிளை தென் பிராந்திய ரயில்வே ஜெனரல் மானேஜருக்கு அனுப்பியுள்ள ஒரு தந்தியில், அனந்த நம்பியார் உண்ணாவிரதமிருப்பதற்குக் காரணமாயுள்ள 11 கோரிக்கைகளும் நியாயமானவையென்றும், அவைகளை உடனே வழங்கவேண்டுமென்றும் கோரியுள்ளது.

விஜயவாடா டிவிஷனில் 1953 முதல் சம்பள அலவன்ஸ் பாக்கி நிலுவையாயிருப்பதற்கு 10,000-க்கு மேற்பட்ட உதாரணங்கள் இருக்கின்றன. அவைகளைப் பரிசீலனை செய்வதற்கு உடனடியாக ஒரு விசேஷ அதிகாரியை நியமிக்க வேண்டும்.

ரயில்வே பொதுஜனத் தொடர்பு அதிகாரியின் அறிக்கை மிகவும் தவறான கருத்தை உண்டு பண்ணுவதாயிருக்கிறது. இதனால் தொழிலாளிகள் மிகவும் கொந்தளிப்படைந்துள்ளனர் என்றும் அத்தந்தியில் மேற்படி யூனியன் கிளைத் தலைவர் திரு. சுந்தரமூர்த்தி தெரிவிக்கிறார்.

## காங்கிரஸ் மாநாட்டுக்கு ரூ. 12 லட்சம் செலவுத் திட்டம்

நாகபுரி, அக். 3—
இங்கு நடைபெறவிருக்கும் இந்திய தேசியக் காங்கிரஸ் மாநாட்டிற்கு 12 லட்ச ரூபாய் செலவாகும் என்று திட்டமிடப்பட்டுள்ளது.

## ஹாலந்தின் போக்கு சீனா கண்டனம்

நியூயார்க், அக். 3—
தூரக்கிழக்கு நிலைமை சம்பந்தமாக நெதர்லண்ட்ஸ் (ஹாலந்து) கடைப்பிடித்துவரும் போக்குக்கு எதிராக சீனா தன் கண்டனத்தைத் தெரிவித்துள்ளது, என்று இங்கு அதிகார பூர்வமாக தெரியவருகிறது.

பீகிங்கிலுள்ள டச்சுப்பிரதிநிதியிடம் இரண்டு நாட்களுக்கு முன்னர் இந்தக் கண்டனக் குறிப்பு கொடுக்கப்பட்டது, என்றும் தெரிகிறது.

குறிப்பாக, ஐ. நா. விலிருந்து கோமிண்டாங் சீனாவை அகற்றக் கூடாதென்றுஅமெரிக்காகொண்டு வந்த தீர்மானத்தை ஹாலந்து ஆதரித்ததற்கும், டச்சு வெளிவிவகார மந்திரி நியூயார்க்கில் வெளியிட்ட அறிக்கைகளுக்கும் சீனா தன் ஆட்சேபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது, என்று பீகிங் அதிகாரிகள் தெளிவாக்கியுள்ளனர் என்றும் தெரிகிறது.

## முந்திரி விற்பனை கார்ப்பரேஷன்

### கேரள சர்க்கார் அமைக்கிறது

திருவனந்தபுரம், அக். 3—
முந்திரி விற்பனை கார்ப்பரேஷன் ஒன்றை அமைக்கும்படி முந்திரி ஆலோசனை போர்ட் தெரிவித்திருந்த சிபார்சை கேரள சர்க்கார் ஏற்றுக்கொண்டது.

இத்தகைய ஒரு கார்ப்பரேஷன் அமைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய சர்க்கார் ஒரு விசேஷ அதிகாரியை நியமித்துள்ளது. (பி. டி. ஐ.)

## தேங்காய் மீது விற்பனை வரி குறைப்பு

### கேரள சர்க்கார் நடவடிக்கை

திருவனந்தபுரம், அக். 3—
தேங்காய் மீது (கொப்பறை உள்பட) விதிக்கப்பட்டிருந்த விற்பனை வரியை கேரள சர்க்கார் குறைத்துள்ளது. இனி கடைசி கட்டத்தில் தேங்காய் வாங்கும் போது ரூபாய்க்கு 4 நயாபைசா வரி கொடுப்பதற்குப் பதிலாக 2 நயாபைசாகொடுத்தால் போதும். இந்தப் புதிய விகிதம் அக்டோபர் 1-ம் தேதி முதல் அமுலுக்கு வரும்.

இது சம்பந்தமாக கேரள கவர்னர் ஒரு அவசரச் சட்டம் பிறப்பித்துள்ளார். (பி. டி. ஐ.)

## மக்களிடம் உற்சாகம் ஏற்படுத்த

### அதிகாரிகளுக்கு காமராஜ் உபதேசம்

சேலம், அக். 2—
எடப்பாடியில் தேசிய அபிவிருத்தித் திட்டத்தைத் துவக்கி வைத்த சென்னை ராஜ்ய முதலமைச்சர் கே. காமராஜ் அதிகாரிகள் மக்களின் நலனுக்காக உழைக்க வேண்டும் என்று உபதேசித்தார். மக்களிடை உற்சாகமும், நம்பிக்கையும் ஏற்படும் முறையில் நடந்துகொள்ள வேண்டும் என்றார். குறிப்பாக, ஏழை மக்களிடம் இவை ஏற்பட வேண்டும் என்றார்.

ஏழை மக்கள் புறக்கணிக்கப்பட்டதாக அவர்கள் கருத இடமளிக்கக்கூடாது. கிராம மக்களின் உதவியையும் ஒத்துழைப்பையும் ஒட்டியே இந்தத் திட்டங்களின் வெற்றி இருக்கிறது என்றார். திருச்சியில் ஒரு கிராமத்தில் கட்சிகள் இருந்த காரணத்தால் ஒரு சிறு வேலை நடப்பதுகூடத் தவக்கமாயிற்று என்று அவர் சுட்டிக் காட்டினார்.




### சென்னை 1

6—10—58

காலை முதல் ஒலிபரப்பு 7.00 துதிப்பாடல்கள், 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு, 7-15 தமிழில் செய்தி, 7-30 வலங்கைமான் எஸ்.ஏ. சௌந்தரராஜன் நாகஸ்வரம், 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு 1-00 மாதர் நிகழ்ச்சி, 1-30 கீதமஞ்சரி, 1-40 ஹிந்தியில் செய்தி, 1-50 கீதமாலிகா, 2 00 தமிழில் செய்தி 2-10 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு

மாலை மூன்றுவது ஒலிபரப்பு 5-30 ஹயக்ரிவாச்சார் பாட்டு, 6-05 பிராந்தியச் செய்திகள், 6-15 கிராம நிகழ்ச்சிகள், 7-15 தமிழில் செய்தி, 7-30 இசை மலர், 8-00 நேயர் விருப்பம், 8-30 ஆர். ராஜகோபாலன் பாட்டு, 9-15 ஹிந்தி பாடம், 9-30 பி. கே. விஸ்வநாத சர்மா வயலின், கே. குஞ்சுமணி மிருதங்கம், 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

6—10—58

காலை முதல் ஒலிபரப்பு 7-00 இசைக்கதிர், 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி, 7-30 வலங்கைமான் எஸ். ஏ. சௌந்தரராஜன் நாகஸ்வரம், 8-00 ஆங்கிலத்தில் செய்தி, 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு 1-00 மயில்ரங்கம் எம். ஜி. சிவசங்கரன் பாட்டு, 1-30 த்வாரம் வெங்கடஸ்வாமி நாயுடு வயலின், 1-40 ஹிந்தியில் செய்தி, 1-50 குரல் இசை, 2-00 தமிழில் செய்தி, 2-10 டி. கே. வல்லபை பாட்டு, 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றுவது ஒலிபரப்பு 5-45 இசைப் பயிற்சி 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி, 7-30 வள்ளுவர் சொல்லோவியம், 7-35 சித்ரகானம், 7-45 இலக்கிய வாசகம், 7-55 இம்மாதப் பாடல், 8-00 தாளவாத்ய கச்சேரி, 8.30 டி. கே. வல்லபை பாட்டு, 9-00 ஆங்கிலத்தில் செய்தி, 9-15 வலங்கைமான் எஸ்.ஏ. சௌந்தரராஜன் நாகஸ்வரம், 10.00 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிட்டவர்: எஸ். கிருஷ்ணசாமி ஆசிரியர் ப. ஜீவானந்தம். முகவரி; 32, பிராட்வே சென்னை.1.
Janasakthi, Tamil Daily, 32, Broadway, Madras.1.